உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 18 | ஆங்கீரஸ ௵ புரட்டாசி ௴ ௧௨ | 1932 ௵ செப்டம்பர் ௴ 16௨ | பகுதி 3

## கடவுள் வணக்கம்.

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
 பொறிபுல னடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம்
 போனவிட மென்பர்சிலபேர்
நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர்
 நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர்கருதி
 நாடிலரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர்
 பேசிலரு ளென்பர்சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
 பிறவுமே மொழிவரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
 பரமசுக நிஷ்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணானந்தமே. (1)

---

கற்றும் பலபல கேள்விகள் கேட்டும் கறங்கெனவே
சுற்றும் தொழில்கற்றுச் சிற்றின்பத் தூடு சுழலினென்னும்
குற்றம் குறைந்து குணமே விடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண்டாய் சுத்த மூடநெஞ்சே. (2)

---

ஏதேது சொன்னாலும் எள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் பல்வேறு வகைப்பட்ட கருத்து வேற்றுமைகளால் மனம் மயங்குவதன்றிப் பரமசுக நிஷ்டை கைகூடாது என்கிறார்.

(இ-ள்) நோக்குமிட மெல்லாம் சிறிதும் நீக்கமில்லாமல் நிறைந்திருக்கின்ற பரிபூரண இன்பமே! சிலர் ஐம்பூதங்களும் ஒடுங்குதற்கு முதற் காரணமான மாயையே முதற் பொருள் என்பர். சிலர் ஐம்பொறிகளாலும் கவரப்படும் விஷயாதிக ளைந்தும் ஒடுங்குமிடமே முதற் பொருள் என்பர். சிலர் அந்தக்கரணங்கள் ஒடுங்குமிடமே முதற் பொருள் என்பர். சிலர் முக்குணங்களும் ஒடுங்கினவிடமே முதற் பொருள் என்பர். சிலர் நாதரூபமே பொருள் என்பர். சிலர் விந்து ரூபமே பொருள் என்பர். சிலர் நடுவாக இருந்த ஆன்மாவாகிய நாமே முதற் பொருள் என்பர். சிலர் உருவாம் என்பர். சிலர் நன்ருக யோசித்தால் அருவமே முதற் பொருளாம் என்பர். சிலர் வேற்றுமை கெடச் சீவபோதம் ஒழிந்த இடமே பொருள் என்பர். சிலர் திருவருளே பொருள் என்பர். சிலர் அந்தமும் ஆதியும் இல்லாத சூனியமே முதற் பொருள் என்பர். சிலர் வேறு நிலைகளையும் பொருள் என்பர். இவற்ருல் மனம் பாதரஸம்போல் சலித்தலை யடையுமே யன்றி மேலான இன்பத்தைப் பயக்கும் நிஷ்டையினை அடையுமோ? அடையா தென்க.

2. இதனுல் சாதுக்களாகிய அன்பர் கூட்டத்தைத் துணையாகக் கொள்ள வேண்டும் என்று நெஞ்சறிவுறுத்துகின்ருர்.

(இ-ள்) அறிவுக்கலப்பற்ற மூட மனமே! பல நூல்களைக்கற்றும், பற்பல கேள்விகளையுங் கேட்டும், காற்ருடியைப்போலத் திரியும் தொழிலினைக் கற்றுத் தேர்ந்து உலக இன்பத்தில் அலைவதால் என்ன பயன்? குற்றம் இன்றி நற்குணம் அதிகரிக்கும் சிவனடியார்கள் சங்கத்தினையே முழுவதும் துணையென்று நம்புவாயாக என்க.

கற்றும் பலபல கேள்விகள் கேட்டும் என்றதினுல் சிந்தித்தலையும் தெளிதலையும் கூட்டுக. இந்நான்கின் வழியே நின்ற பெரியோர்களும் அச்சாதனங்கட்கு இடையூறு வாராது அவற்ருலாய சாத்தியத்தினை அடைய வேண்டுமாயின் சாது சங்கமாகிய சிவனடியார் கூட்டுறவே அத்தியாவசியம் என்பதாம். "அடியாருறவும் அரன்பூசை நேசமும் அன்புமன்றிப், படிமீதில் வேறு பயனுளதோ" என்ருர் பட்டினத்தாரும்.

3. இதனுல் தம்மீது இரக்க மின்மைக்குக் காரணம் என்ன என்று கேட்கிருர்.

(இ-ள்) அடியேனுடைய குறைகளை யெல்லாம் என்னென்ன விதமாக எடுத்துச் சொன்னுலும் தேவரீர் எள்ளளவும் என்மாட்டு இரங்காதிருக்கும் கபடத்தன்மை யாது? அடியேனுக்கு உபாயம் சொல்லுவாய் என்பதாம்.






## துறையூர் மகாநாடுகள்.



உலகத்திலுள்ள பெரும்பான்மையான நாடுகள் பற்பல துறைகளிலும் தீவிரமாக முன்னேற்றமடைந்து வரும் இக்காலத்தில், நமது பழம் புகழ்ப் பாரதநாடு வறுமை, பிணி, அறியாமைகளால் ஆவி சோர்ந்து அடிமைப் படுகுழியில் ஆழ்ந்து கிடக்கிறது. பாரத நாட்டின் மற்றப் பாகங்களைக் காட்டினும் நமது தமிழகத்தின் தற்கால நிலைமை மிகவும் பரிதாபகரமானதாகும். பண்டை நாளில் சமய வேற்றுமையற்றுச் சமதர்மம் விளங்கிய தமிழ்நாடு—ஆடவரும் பெண்டிரும் தம்முள் மனமொத்துக் காதல் மணம் புரிந்து இன்பவாழ்க்கை நடத்திய தமிழ்நாடு—பெருந் தடங்கட் பிறைநுதலாரெலாம், பொருந்து கல்வியும் செல்வமும் பூத்து வாழ்ந்த தமிழ்நாடு—வீரப் பெண்மணிகள் விளங்கிய தமிழ்நாடு—கைத்தொழிலிற் சிறந்த தமிழ்நாடு—திரைகடலோடியும் திரவியந் தேடிய தமிழ்நாடு—மேழிச் செல்வங் கொழித்த தமிழ்நாடு—வீரஞ்செறிந்த வில்லேருழவர் வீற்றிருந்த தமிழ்நாடு-கலைகள் விளங்கிய தமிழ்நாடு—கல்வி சிறந்த தமிழ்நாடு இப்பொழுது எந்நிலையில் இருக்கின்றது? நேயர்களே! சற்றே சிந்தித்துப் பாருங்கள். எங்கு நோக்கினும் சாதி சமயப் பூசல்! எங்கு நோக்கினும் பொருளற்ற மூடப் பழக்க வழக்கங்கள்! கல்வியில்லை. செல்வம் இல்லை. வீரம் இல்லை. நமது நாட்டின் பண்டைக் கைத்தொழில்களும் இருந்த இடம் தெரியவில்லை. திரைகடலோடிப் புரிந்த வணிகம் இல்லை. உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க வீடும் இன்றித் தவிக்கும் இழிநிலையில் தமிழ் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இக் கொடுமைகளெல்லாம் நீங்கி மக்கள் இன்ப வாழ்க்கை நடத்தும் நன்னாள் எது என்றும் தெரியவில்லை.

தமிழ் மக்களின் அரசியல், சமூகவியல், சமயவியல், மொழியியல் முன்னேற்றங் கருதிப் பலர் பற்பல வகைகளில் உழைத்து வந்திருக்கின்றனராயினும் எதிலும் உருவான முன்னேற்றம் இந்நாள்வரை ஏற்படவில்லை. நமது நாட்டில் அரசியல் வாதமும் சமூக வாதமும் அதிதீவிரமாகப் பேச்சளவில் உச்சநிலை யடைந்துவிட்டன. சமய சீர்திருத்தமும் மொழி வளர்ச்சியும் கருதி யுழைக்கக் கடமைப்பட்டவர்கள் வாய்மூடி மௌனிகளாகி வாளா உறங்கிக் கிடக்கின்றனர். இந்நிலையில்

சென்ற மாதம் தமிழ் மக்களின் அரசியல், சமூக, சமய, மொழி வளர்ச்சிக்கான முடிவுகளைக் கண்டு உறுதிசெய்யும் நோக்கத்துடன் திரிச்சி ஜில்லாவைச் சேர்ந்த துறையூரில் தமிழர் மகாநாடு கூட்டப்பட்டது. அதே சமயத்தில் தமிழ்ப் புலவர் மகாநாடும், தமிழ் மாணவர் மகாநாடும் கூட்டப்பட்டன. இம் மகாநாடுகளின் நிகழ்ச்சி முறைகளில் பங்கெடுத்துக் கொண்டவர்களெல்லாரும் தமிழகம் போற்றும் பேரறிஞர்கள். ஆனால் இம் மகாநாடுகளின் முடிவு என்ன? ஏமாற்றம் ஏமாற்றம் என்றே வருத்தத்துடன் குறிப்பிடுகின்றோம். தமிழ்ப் புலவர் மகாநாட்டிலும், தமிழ் மாணவர் மகாநாட்டிலும், எத்தகைய தீர்மானமும் நிறைவேற்றப்படவில்லை. இவ்விரு மகாநாடுகளும் திறப்புரை, வரவேற்புரை, தலைமையுரை அளவில் கலைக்கப்பட்டன. இங்ஙனம் ஒரு தீர்மானமும் இன்றி இம் மகாநாடுகள் முடிக்கப்பட்டதின் உண்மை என்ன என்று எமக்கு விளங்கவில்லை. இஃது எவ்விதமாயினும் இம்மகாநாடுகளில் நிகழ்த்தப்பட்ட ஆறு சொற்பொழிவுகளும் எல்லோராலும் பொன்னேபோற் போற்றத் தக்கவை என்பதில் எட்டுணையும் ஐயம் இல்லை. தமிழ்ப் புலவர் மகாநாட்டின் தலைவர் உயர்திருவாளர் கா. ரா. நமச்சிவாய முதலியாரவர்களின் தலைமையுரை தமிழ்ப் புலவர்கட்கும், மற்றவர்கட்கும் புத்துணர்ச்சியை எழுப்பும் என்று நம்புகின்றோம். ஆங்கில கலாசாலைகளிலுள்ள தமிழ்ப் பண்டிதர்களின் குறைகளையும், செல்வர்களின் கடமைகளையும், சர்வ கலாசாலை தமிழ்மொழி வளர்ச்சிக்காகச் செய்ய வேண்டிய உரிமையையும், இயற்கைப் பாக்களும், உரை நடை நூல்களும் தோன்றவேண்டிய அவசியத்தையும், விஞ்ஞான அறிவின் சிறப்பையும், விஞ்ஞான சாஸ்திரங்களைத் தமிழ்மொழியில் மொழி பெயர்க்கும் வழியையும், கோவில்களை யொட்டிக் கலாசாலைகள் அமைக்கப்பட வேண்டிய அவசியத்தையும் இவைபோன்ற பல அரும் பெரும் கருத்துக்களையும் நமது தமிழ்ப் பேராசிரியர் எடுத்துக்காட்டிய சாதுரியம் எப்பேர்ப்பட்டவர் மனதையும் கவர்ந்துவிடும் என்றே நம்புகின்றோம். தமிழ்ப் புலவர் மகாநாட்டின் வரவேற்புக்கழகத் தலைவராயிருந்த பண்டித. வேங்கடசாமி நாட்டாரவர்களும், திறப்புவிழா நிகழ்த்திய பண்டிதமணி. மு. கதிரேசன் செட்டியாரவர்களும் நிகழ்த்திய சொற்பொழிவுகள் கற்றோர் மனங்களைக் கவர்வனவாகும். இவர்களும் தமிழ்மொழி வளர்ச்சிக்கான பல அரிய யோசனைகளைத் தெரிவித்திருக்கின்றனர்.

தமிழ் மாணவர் மகாநாட்டில் தலைமை வகித்த திரு வி. கலியாணசுந்தர முதலியார் நிகழ்த்திய சொற்பொழிவும், வரவேற்புக் கழகத் தலைவர் ஸ்ரீமான் வேங்கடாசல ரெட்டியாரவர்களும் திறப்புவிழா நிகழ்த்திய கோவை ஸ்ரீமான் ராமச்சந்திரன் செட்டியாரவர்களும் நிகழ்த்திய சொற்பொழிவுகளும் தமிழ் மாணவர்க்கு விழிப்பும் எழுச்சியும் உண்டாக்குவனவாகும். ஆனால் இவ்விரு மகாநாடுகளிலும் தீர்

மானங்கள் நிறைவேற்றப்படாமை பெருங் குறையேயாகும். மகாநாடு களைக் கூட்டியவர்கள் தீர்மானங்களை அலக்ஷியம் செய்தது ஏனோ?

இனி, தமிழர் மகாநாட்டு நிகழ்ச்சிகளைக் கவனிப்போம். தமிழர் மகாநாட்டில் தலைமை வகித்தவர் கல்வி மந்திரி கனம். குமாரசாமி ரெட்டியாரவர்க ளாவர். வரவேற்புக் கழகத் தலைவர் உயர்திருவாளர் உமாமகேசுவரம் பிள்ளையவர்கள். திறப்புவிழா நிகழ்த்தியவர் உயர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள். இம் மூவரும் தமிழ் மொழியின் சிறப்பைப்பற்றியும், அதனை வளர்க்கும் முறைகளைப்பற்றி யும் நன்கு விளக்கிக் காட்டியிருக்கின்றனர். உயர்திரு உமாமகேசு வரம் பிள்ளையவர்கள் பல்கலைக் கழகத்தாரும் பிறரும் தமிழ் மொழியை அலக்ஷியம் செய்துவரும் இழிந்த மனப்பான்மையை எடுத்துக் காட்டிக் கண்டித்தது எல்லோருக்கும் மிகுந்த உணர்ச்சி யூட்டி யிருக்குமென்று நம்புகின்றோம். எல்லாம் சரி. தமிழர் மகா நாடு எந்நோக்கத்துடன் கூட்டப்பட்டது? எவ்வெத்தீர்மானங்க ளைச் செய்தது? என்பதை எண்ணும்போது எமக்கு மிகவும் வருத் தம் உண்டாகிறது. தமிழ் மக்களின் சமூகச் சீர்திருத்தம், தமிழ் மொழி வளர்ச்சி முதலியவற்றிற்கு வழி கோலுவதே தமிழர் மகா நாட்டின் நோக்கம் என்று மகாநாட்டு நிர்வாகிகள் முதலில் அறிவித் திருந்தனர். ஆனால் தமிழ்மக்களின் சமூகச் சீர்திருத்தத்திற்குரிய தீர்மானம் ஒன்றேனும் நிறைவேற்றப்படவில்லை. தமிழர் மகாநாட் டில் தமிழ்மொழி பற்றிய தீர்மானங்கள் மட்டும் ஒரு சில நிறைவேற் றப்பட்டன. சமூக சம்பந்தமான தீர்மானம் நிறைவேற்றப்படாமை யின் ரகஸியம் என்ன என்று வெளிப்படையாகத் தெரியவில்லை. மகா நாடு கூட்டியவர்களும் தலைமை வகித்தவர்களும் சமயத்தை அடிப் படையாக வைத்தே எவ்வகைச் சமூக சீர்திருத்தமும் நிகழவேண் டும் என்னும் கொள்கை படைத்தவர்கள். சுயமரியாதை இயக்கத்தை சேர்ந்தவர்களின் கொள்கை இதற்கு முற்றிலும் மாறுபட்டது. இவர் கள் சமயத்தையே முற்றிலும் அழித்துவிடவேண்டும், சமயத்தை வைத்துக்கொண்டு எத்தகைய சீர்திருத்தமும் செய்ய முடியாது என்று வாதிக்கின்றவர்கள். மகாநாட்டில் தோத்திரப் பாடல்கள் பாடக்கூடாது என்று சுயமரியாதையாளர்கள் தடைசெய்துவிட்ட தும் இதுபற்றியேயாகும். சுயமரியாதையாளர் சமயத்தை அடிப் படையாக வைத்த சீர்திருத்தத் தீர்மானங்களை எதிர்ப்பார்கள் என்று அஞ்சியே சமூகச் சீர்திருத்தத் தீர்மானம் எதுவும் தமிழர் மகாநாட் டில் தலைகாட்டவில்லை என்று நாம் ஊகிக்கவேண்டியிருக்கிறது. இஃது உண்மையாயின் தமிழர் மகாநாடு ஒரு வகையில் பெருந் தோல்வியடைந்துவிட்டது என்றே நாம் கூறுவோம். சுயமரியாதை இயக்கக் கொள்கை இன்னது என்று தமிழகம் முழுவதும் அறியும். இக் கொள்கைக்கு முரண்பட்ட கொள்கைபடைத்த பல அறி ஞர்கள் தமிழகத்தில் இருக்கிறார்கள். இவர்களும் சீர்திருத்தம்

வேண்டுபவர்களே. ஆனால் சமயத்தை அழிக்கச் சம்மதிக்கமாட்டார்கள். இத்தகையோரிற் பலர் மகாநாட்டுத் தலைவர்களாகவும், திறப்புவிழாத் தலைவர்களாகவும், கொடியேற்றுவிழாத் தலைவர்களாகவும் துறையூரில் எழுந்தருளியிருந்த அரிய சந்தர்ப்பத்தில்—பல பேரறிஞர்கள் பிரதிநிதிகளாக வீற்றிருந்த நல்ல சமயத்தில் சமயக் கொள்கைகளை அடிப்படையாக வைத்த தமிழர் சீர்திருத்த முடிவுகளை மகாநாடு செய்யத் தவறியது பெரிதும் வருந்தத்தக்க விஷயமேயாகும்.

சுயமரியாதையாளர் எல்லோரும் வெறுங் கலகக்காரர்கள் என்று யாரும் கூறத் துணியமாட்டார்கள் என்றே எண்ணுகின்றோம். அவர்களிற் பெரும்பான்மையோர் தாங்கள் உண்மையென்று நம்புவதை செயலிற் காட்டியும் வாதித்தும் வருகிறார்கள். மேற்படி மூன்று மகாநாடுகளிலும் சுயமரியாதை அன்பர்கள் கலந்துகொண்டிருக்கின்றனர். இவர்களிற் சிலர் சில சமூகச் சீர்திருத்தத் தீர்மானங்களை அனுப்பியிருந்தனர் என்று தெரிகிறது. அத் தீர்மானங்கள் அங்கீகரிக்கப்படவில்லை. அவை அங்கீகரிக்கப்படாமைக்காக யாம் வருந்தவில்லை. பெரும் பொருட் செலவில் தமிழர் மகாநாடு கூட்டித் தக்க பேரறிஞர்களை ஓரிடத்தில் வீற்றிருக்கச் செய்தவர்கள் சமூகச் சீர்திருத்த விஷயத்தில் உண்மை காணும் ஒரு மகத்தான சந்தர்ப்பத்தை இழந்துவிட்டார்கள் என்பதை எண்ணியே பெரிதும் வருந்துகின்றோம். மகாநாட்டில் குழுமியிருந்த தமிழ்ப் பேரறிஞர்களும் ஆங்கில—தமிழறிஞர்களும் சுயமரியாதையாளரைத் தங்கள் பக்கலில் இழுத்துக்கொள்ளும் அறிவாற்றல் வாய்ந்தவர்கள் என்பது எமது நம்பிக்கை. சுயமரியாதையாளர் மகாநாட்டுக்கு வருவார்கள் என்று முன்னரே அறிந்திருந்த மகாநாட்டு நிர்வாகிகள் சமூகச் சீர்திருத்த விஷயத்தில் தைரியமிழந்து விட்டது மிகவும் இரங்கத்தக்கதாகும் என்பதே நமது கருத்து. இதனாலேயே மூன்று மகாநாடுகளும் ஒருவகையில் தோல்வியுற்றன என்று நாம் கூறத் துணிகின்றோம்.

தமிழர் மகாநாட்டில் நிறைவேறிய தமிழ்மொழி பற்றிய தீர்மானங்களெல்லாம் பெரிதும் குறிப்பிடத் தக்கவை என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. ஆங்கிலக் கல்லூரிகளில ஆங்கில மொழிந்த கலைநூல்கள் அனைத்தையும் தாழ் மொழியிலேயே கற்பிக்க வேண்டும் என்றும், சென்னைப் பல்கலைக் கழகத்தாரும், சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழகத்தாரும் வடமொழி வித்துவான் சிரோமணி வகுப்புக்களுக்கு ஒப்பத் தமிழிலும் இலக்கியம், இலக்கணம், சகலமத வேதாந்த சித்தாந்தம் முதலிய பிரிவுகளையும் ஏற்படுத்தி நடத்த வேண்டும் என்றும், கோவில்—மடவருவாய்களில் மீதி யாகும் பொருள்களை நூல் நிலையங்கள், வாசகசாலைகள், தமிழ்க்கலாசாலைகள் அமைத்தல முதலிய தமிழ்வளர்ச்சிக்கும், சைவ வைணவ சமய வளர்ச்சிக்கும் பயன் படுத்தவேண்டும் என்றும் மகாநாடு நிறைவேற்றியுள்ள தீர்மானங்கள் தமிழ்ப் பொதுமக்கட்கு மிகுந்த உணர்ச்சியும்

வழிப்பும் உண்டாக்கும் என்று நம்புகின்றோம். ஆங்கில கல்லூரிகளிலும் கலாசாலைகளிலும் தமிழ்மொழி பெரிதும் புறக்கணிக்கப்படுகிறது. "ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரியை ஓட்டியது" போல் ஆங்கில மொழியின் ஆதிக்கம் தாய்மொழியாம் தமிழ் மொழியை அழித்துக்கொண்டு வருகிறது. கலாசாலைகளில் ஆங்கில மொழிந்த பிறவெல்லாம் தாய்மொழி வாயிலாகக் கற்பிக்கப்படலாம் என்ற விதி ஏற்பட்டிருந்தும் யாரும் அதை லக்ஷியம் செய்வதில்லை. அந்நிய மொழிவாயிலாகக் கல்வி கற்பிப்பதால் வீண் காலக் கழிவு ஏற்படுவதோடு மாணவர்கள் மலைப்புற்றுத் தடுமாறுளத்தராகி விடுகின்றனர். எனவே தமிழர் மகாநாடு அவ்விஷயத்தில் கவனம் செலுத்தி எடுத்துக் காட்டியது பாராட்டத் தக்கது. நடைமுறையில் உள்ள தமிழ்மொழியை ஒரு சிலர் பிடிவாதமாகப் புறக்கணித்து வருகின்றனர். வழக்காறு அற்ற வடமொழிக்கே பெரிதும் ஏற்றங் கொடுத்து வளர்க்கத் துணிகின்றனர். தமிழ்நாட்டில் வடமொழி வித்துவான் சிரோமணித் தேர்ச்சிக்குக் கற்பிக்கும் கலாசாலைகள் பதினெட்டு. தமிழ்வித்துவான் தேர்ச்சிக்குக் கல்வி பயிற்றும் கல்லூரி ஒன்றே ஒன்று. பல்கலைக் கழகத்தாரும் வடமொழிக்கே ஏற்றங் கொடுத்து அம்மொழியில் பல தேர்ச்சிப் பிரிவுகளை ஏற்படுத்தியிருக்கின்றனர். இஃது என்ன முறை என்று கேட்கின்றோம். தமிழ்மக்கள் இதைப்பற்றித் தீவிரமாகக் கிளர்ச்சி செய்து தன் மதிப்பை நிலைநாட்டவேண்டும். இதுபற்றிய தீர்மானம் நிறைவேற்றிய தமிழர் மகாநாட்டாரை நாம் பெரிதும் வாழ்த்துகின்றோம். கோவில்-மட வருவாய்களில் மீதியாகும் பொருள்களைத் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பயன்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்ட தீர்மானம் மிகவும் முக்கியமானதாகும். நமது தென்னாட்டில் ஏராளமான வருவாயுள்ள கோவில்களும் மடங்களும் இருக்கின்றன. இவற்றின் வருவாய்களெல்லாம் விழலுக்கு இறைத்த நீராதல் கண்கூடு. கோவில் வருமானங்களெல்லாம் வாண வேடிக்கைகளிலும், சதுர்க் கச்சேரிகளிலும் வீணாக்கப்படுகின்றன. மடங்களின் பொருள்கள் வம்பு வழக்குகளிலும், களியாட்டங்களிலும், கொலைகளிலும் வீணாகின்றன. இவற்றிற்கெல்லாம் கேள்விமுறை கிடையாது. நமது முன்னோர்கள் சமய வளர்ச்சியும் மொழி வளர்ச்சியுங் கருதியே கோவில்-மடாலயங்கட்கு மிகுந்த வருவாயுள்ள மானியங்களை விட்டனர். இப்பொழுது நம் முன்னோரின் நன்னோக்கம் சரியான முறையில் நிறைவேற்றப்படுகின்றதா என்று தமிழ் மக்களை வினவுகின்றோம். அப் பொருள்களைத் தக்க வழியில் பயன்படுத்தச் செய்யும் உரிமை தமிழ்ப்பொது மக்கட்குண்டு. இதுகாறும் உறங்கியது போதும். இனியேனும் விழித்தெழுந்து கோவில் தருமகர்த்தாக்களையும் மடாதிபதிகளையும் நன்னெறியிற் படருமாறு தூண்டுவார்களாக.

ஓம் தத் ஸத்.

# "பண்டைய வீர நாரீமணிகள்"

(ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை)

"ஸர்வம் சக்தி மயம் ஜகத்"—என்பது நமது முன்னோர் கண்ட உண்மை மொழி. சக்தி யின்றிச் சிவம் அருள் புரிதல் அரிது; திருமகளின்றி நாராயணனால் அருள் பொழிய இயலாது; கலைமக ளின்றி நான்முகனால் வேதம் ஓத இயலாது. ஆதலின், சிவன் தனது உட லில் ஒரு பாதியையும், மாயவன் தனது திருமார்பையும், நான்முகன் தனது நாவையும் தத்தமது ஆருயிர்த் தேவியர்க்கு உறைவிடமாகச் செய்து உவப்பா ராயினர். பொருட் செல்வத்தை விரும்புவோர் மலர்மகளைப் போற்றுகின்ற னர்; கல்விச் செல்வத்தை விழைவோர் கலைமகளை ஏத்துகின்றனர்; சித்தியை வேண்டுவோர் சக்தியை வழிபடுகின்றனர்; வீரத்திற் சிறந்தோர் போர்த் தலைவி யாம் காளியை இறைஞ்சுகின்றனர். ஆதலின், வேண்டுவார் வேண்டுவன வற்றை அளித்தருளும் விமலைகள் பெண் தெய்வங்களே! நமது முன்னோர் இப் பரந்த உலகை 'பூமிதேவி' யாகவே போற்றினர்! மக்கள் தோற்றத்திற்கே மங் கைய ரன்றோ காரணர்! இந் நில உலகில் நிகழ்ந்த பல பெரும்போர்களும் பெண்கள் பொருட்டு விளைந்தவையே! பலதிறப்பட்ட வீரர்களை ஈன்றளித்து, உலகின் இடுக்கண்களை அவ்வப்போது நீக்குவோரும் பெண்களே!

பண்டைக் காலத்திலே, ஏனைய அனைவரும் நாணித் தலை குனியுமாறு நமது பாரத தேவி, பூசுவன பூசிப் புனைவன புனைந்து தேசுபெறச் சீரிய கலை அணிந்து செங்கோல் தாங்கி, வீரமும் அருளும் பொங்கித் ததும்பிப் பொலி யும் புன்னகை முகத்தினளாய்—தனி முடி புனைந்து அரியணை அமர்ந்து அரசு செலுத்திய நாட்களிலே—நமது பரத கண்டத்துப் பெண்மணிகள் பலரும் ஞானத்திற்கு ஊற்றுக்களாய்—வீரத்திற்குப் பிறப்பிடங்களாய்—அரு ளுக்குச் சுரப்பிடங்களாய்—அன்புக்குக் கொழு கொம்புகளாய்—கற்புக்குப் புகலிடங்களாய் வாழ்ந்து வந்தனர். வேத காலத்திலே பற்பல வீரத் தாய் மார்கள், மாயையை வெற்றிகொண்டு ஞானமும் வைராக்கியமும் வளர்ந்தோங் கும் தபஸ்வினிகளாய், ஆன்ம ஞானக் கல்வி பயின்று உண்மைநிலை தெளிந்து ஒழுகி உய்வு பெற்றனர். இதனை வலியுறுத்தப் போதிய சான்றுகள் வட மொழி மறைகளில் பற்பல உள.

எத்தனை இன்னல்கள் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்து விளைந்து துன்புறுத்தினும்—தாம் கொண்ட கொள்கையை—கண்ட உண்மையை—

சிறிதளவும் நழுவ விடாது "இடும்பைக்கு இடும்பை படுப்பர்; இடும்பைக்கு— இடும்பை படாஅதவர்"—எனும் பொய்யா மொழியார் பொன் மொழிக்கு இணங்க உறுதியோடு பொறுத்து நின்று காப்பாற்றிக்கொண்ட காரிகை களின் மாண்பு என்றென்றும் மறக்கற் பாலதன்று. கானகம் அடுத்துக் காந் தனை விடுத்து, ஆருயிர் மைந்தனைப் பறி கொடுத்து, பழிமொழிகள் பலவும் செவி மடுத்து, முடிவில் தனது கணவனாலேயே வெட்டப்பட நேர்ந்த போதும் சத்திய நெறியினின்றும் சந்திரமதி தேவி சற்றேனும் பிறழ்ந் தனரோ? வல்லரக்கனால் வஞ்சிக்கப்பட்டு, தலைவனும் தாசரதி யிடத்தினின் றும் பிரிக்கப்பட்டு, அரக்கியர் பலரால் அச்சுறுத்தப்பட்டு, அருந்துயர் உழன்ற போதும் அன்னை ஜானகியார் இராவணனது பசப்பு மொழிகளில் மயங்கி னரோ? அவ்வல்லல்களினின்றும் அகன்று இராமனிடம் எய்துவதற்குத் தமது தோள்களில் இவர்ந்து வருமாறு அனுமான் வேண்டியதற்கேனும் உடன்பட்டனரோ?—"ஆரம் தாழ் திரு மார்பற்கு அமைந்ததோர்—தாரந் தானலனேனும், 'தயா' எனும்—ஈரந்தான் அகத்து இல்லை என்றாலும், தன் —வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய்!"—என்றன்றோ தனது ஆர்வலனது கடனும் வீரத்தை அறிவுறுத்தியருளினர்! என்னே அன்னையின் வீர உணர்ச்சி இருந்தவாறு!

மற்றும், மாயம் வல்ல அரக்கர்களோடு தத்தமது வீரக்கணவன்மார் போராடிச் சலித்துச் சிறிதே தளர்வுற்ற காலத்து, அஞ்சாது போராடி வெற்றி விளைவித்த வீரத்தேவிகளும் சிலர் உளர். இமையவர் தலைவனும் இந்திரனை யும் அச்சுறுத்தி அல்லற்படுத்திய சம்பராசுரனோடு தசரதச் சக்கரவர்த்தி கொடுஞ்சமர் புரிந்து சற்றே தளர்வுற்ற காலத்தில், அம்மன்னனொடு சென் றிருந்த அவரது தேவியாம் கைகேசி மன உறுதி தளராது வீராவேசங் கொண்டு வேந்தனுக்குப் பேருதவி புரிந்து அரக்கனது செருக்கை அடக்கி யொழித்து மடிவித்தனளன்றோ! அவ்விந்திரனை மற்றொரு முறை அச்சுறுத்தி நல்லோரை அல்லற்படுத்தித் திரிந்த நரகாசுரனோடு பூபாரந் தீர்க்கப் புகுந்த புயல்வண்ணனும் கண்ணபிரான் கடும்போர் புரிந்து சிறிது அயர்வுற்ற வளை வில், அவருடன் சென்றிருந்த சத்யபாமா தேவியார் சிலை எடுத்துக் கணை தொடுத்து வீறுகொண்டு போராடி அவ்வரக்கனின் உயிரை நீக்கி உலகின் துயரைப் போக்கினளன்றோ! இவ்வண்ணம் போர்த் தொழிலில் திறமைபெற் றிருந்த வீர நாரீமணிகளுள் சிலர், தேர்த்தொழிலிலும் வல்லவராக இருந்தன ரென்பதற்கு, கண்ணபிரான் தங்கையாம் சுபத்திரை தன்னைக் கடிமணம் புரிந்து தேரேற்றிச் செல்லும் விஜயனோடு எதிர்த்துவந்த யாதவ சேனைகள் போராடித் தோல்வியுறுமாறு தாங்கள் இவர்ந்து செல்லும் இரதத்தை மிகத் திறம்படச் செலுத்திச் சென்றனள் என்பது சிறந்ததொரு சான்றாகும்.

'தங்களுடைய இன்னுயிரைக் கொடுத்தேனும் தமது கணவர்களுக்கு நன்மையைச் செய்வதே, மங்கைகட்கு இவ்வுலகில் அதிக உயர்வுடையதும்

பெருமை தரத்தக்கதுமான செயலாகும்'—என்று மகாபாரதம் கூறுகின்றது. சகிக்கவொண்ணாத துயரம் நேர்ந்தவிடத்து ஒப்பாரி வைத்துப் புலம்ப ஒருப்படாது—மயங்கிக் கலங்கித் தயங்காது—அச்சத்தை உதறித் தள்ளி வீர உணர்ச்சியோடு வீறு கொண்டெழுந்து அறத்தின் உண்மையை விளக்கிக் காட்டி அநீதியின் ஆட்டத்தை அடக்குவது, எவ்வாற்றானும் நற்குணப் பெண்டிர் மாண்புக்கு மாறுபட்டதாகாது. பாண்டவர் ஐவர் அகங்கட்கும் ஒரு தனிக் கண்மணியாய் விளங்கிய பாஞ்சாலி, துரியோதனனது அக்கிரமச் செயல்களை அடக்க அஞ்சி பதுமைகளே போல் வீற்றிருந்த மன்னர் முன்னிலையிலே, மாதவன்பால் சுமையைப் போட்டு மானத்தைக் காத்துக்கொண்டு கூறிய சூளுரைகளை நோக்குங்கள்:—

"அரசவையி லெனைஏற்றி அஞ்சாமல் துகில் தீண்டி அளகம் தீண்டி
விரைசெயளி யினம்படிதார் வேந்தரெதிர் தகாதனவே விளம்புவோரைப்
பொருசமரில் முடிதுணித்துப் புலால்நாறும் வெங்குருதி பொழியவெற்றி
முரசறையும் பொழுதல்லால் விரித்த குழல் இனிஎடுத்து முடியேன்—"

என்றாள்.

பத்தினிக் கடவுள் என்று போற்றப்படும் கண்ணகி அம்மையார், தமது ஆருயிர்க் கணவனும் கோவலன் பொற்கொல்லனது சூழ்ச்சியால் வெட்டுண்டு இறந்தான் என்று கேள்வியுற்றதும் அஞ்சி வாளா கிடந்தனரோ? அழுது கலங்கி நின்றனரோ? பின், என் செய்தார்? வீர உணர்வோடு வீறுகொண்டெழுந்து வேந்தனிடம் போந்து, தமது கணவனின் கரவின்மையையும் மன்னன் இழைத்த பெரும் பிழையையும் செவ்விதில் விளக்கிக் காட்டினரன்றோ! அத்தகைய வீர நாரீமணிகளின்—கற்புக்கரசிகளின்—வழித்தோன்றிய தற்கால பாரதப் பெண்மணிகாள்! தற்கால ஜன சமூகத்தின் தாறுமாறான செயல்களைத் தெளிவுபெற விளக்கிக் காட்டி நாட்டைச் சீர்திருத்தும் நற்பணியில் பங்கெடுத்துக் கொள்வது உங்களது கடமையாயிருக்க, இன்னும் முன்னேற்ற வேட்கையே யின்றி 'விலகி வீட்டில் ஓர் பொந்தில் வளர்வது' தானா உங்களை உய்விக்கக்கூடியது? நாட்டின் முன்னேற்றத்திற்கு ஏற்ற நற்பணிகளில் ஆடவரை மட்டும் புகுத்திவிட்டு, வீரநாரீமணிகளின் வழித்தோன்றிய நீவிர் வீணே காலத்தைக் கழிப்பது அழகாமோ? சகோதரிகளே! இவ்விவேகானந்தரது அருள்மொழிகளை நோக்குங்கள்:—

"ஏ! இந்தியாவே! உனது பெண்தன்மையின் நோக்கம் சீதை, சாவித்திரி, தமயந்தி என்பதை மறந்து விடாதே! உனது மணம், செல்வம், வாழ்க்கை முதலியன இந்திரிய சுகபோகத்திற்காக அல்ல என்பதை மறந்து விடாதே! நீ அன்னையினுடைய பீடத்தில் இடப்படுவதற்கு ஒரு பலியாகப் பிறந்திருக்கிறாய் என்பதை மறந்து விடாதே!"

பின்னும், சங்ககாலத்திலே அரும்பெரும் வீரச் செயல்கள் செய்த வீரத் தாய்மார் பலர் இருந்தன ரென்பது, புறநானூற்றுப் பாக்களால் புலனாகக் கிடக்கின்றது. அவர்களுள், ‘தன் மகன் பேரில் புறமுதுகிட்டு ஓடினன்’ என்று கேள்வியுற்றந ரைமயிர்க் கிழத்தாய் ஒருத்தி, ‘அஃது உண்மையாயின்,



அவனுக்குப் பாலூட்டிய என் கொங்கைகளை அறுத்தெறிவேன்’-என்று சூளுரை கூறி வாள்பற்றிய கையுடன் போர்க் களம் சென்று தேடுங்கால், அவன் வெட்டுண்டு மடிந்து கிடத்தலைக் கண்டு அவனைப் பெற்றெடுத்த நாளினும் பெரு மகிழ்வுற்றாள் என்பதும்; முதல் நாள், தனது கணவனையும் மறுநாள் தன் தந்தையையும் போரில் பறிகொடுத்த வீரத் தாய் ஒருத்தி, மறுநாளும் ‘செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி-வேல் கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇப்—பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி—ஒரு மகனல்லது இல்லோள்—(அவனைச்)



செருமுகம் நோக்கிச் செல்கென விடுத்த’தும் ஈண்டு குறிப்பிடற்பாலன. கடந்த இரண்டொரு நூற்றாண்டுகட்கு முன்பு கூட, வடநாட்டில் பகைவனும் அலாவுதீன் கையிற் சிக்கிச் சிறைப்பட்ட சித்தூர் வேந்தனும் தனது காந்தனுமான பீமசிங்கை பகைவர்களிடத்தினின்றும் தந்திரமாக விடுவித்த பத்மினி என்ன! சித்தூர்க் கோட்டையைக் கைப்பற்ற முனைந்து அருஞ் சமர் புரிந்த அக்பரோடு, ஆணுடை அணிந்து



அமர்க்கெழுந்து பல எதிரிகளையும் வதைத்து படைத்திறம் பெரிதும் படைத்த அச் சேனையோடு ஆருயிர் பிரியும் வரை வீர வெறிகொண்டு போராடிய கிருஷ்ண குமாரி என்ன! பதின்மூன்று பருவமே வாய்ந்த தன் மகன் வீரசிம்மனோடு பகைவனும் அஸப்கானது சேனைகளை எதிர்த்துப் போராடி, அம்பனைய கண்

ணிலே அம்பொன்று தைக்கப் பெற்று அருந்துயர் உழந்தும் அகந்தளராது பகைவரது படைவலியின் மிகையால் மானபங்கம் விளையும்போல் தோன்றிய வேளையில் வீர சுவர்க்கம் புகுந்த இராணி துர்க்காவதி என்ன! தமிழ்நாட்டிலே தனது குடிமக்களை தருமநெறி தவறாது மிகத் திறம்பட ஆண்டுவந்த மதுரைக்கு அரசியாம் மங்கம்மாள் என்ன! இன்னோரன்ன மங்கையர் திலகங்களின் அஞ்சா வீரத்தை என்னென்று எடுத்துரைப்பது? எங்ஙனம் வருணித்து எழுதுவது?



அத்தகைய வீரத் தாய்மார் வழித்தோன்றிய பாரதநாட்டுப் பெண் தெய்வங்களே! கேவலம் ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு திரிவதற்கும் ஆடவரது ஆர்வத்தைத் தீர்ப்பதற்குமே உங்களை ஆண்டவன் படைக்கவில்லை என்பதை உணருங்கள்! மேல்நாட்டு வீரர்கள் பலரும் இந்நாட்டு வீரர்கள் பலரும் அவரவர்களது அன்னைமாரால் தொட்டிற் பருவந்தொட்டே இனிய பாலோடு வீர உணர்ச்சியையும் சேர்த்து ஊட்டி வளர்க்கப்பட்டவர்கள் ஆவர். உங்களது உள்ளம் வீர உணர்ச்சி எனும் கடலில் திளைக்குமாயின், உங்களைச் சார்ந்த மக்களும் ஆடவரும் கோழைமை நீங்கி ஆண்டகையாளர்களாய் அஞ்சா நெஞ்சுடையர்களாய் நாட்டுநலத்திற் கேற்ற நற்பணிகளில் தலைப்பட்டு மாண்பு பெறுவது உறுதியாகும்.

சகோதரிகாள்! இதுகாறும் பண்டைய பாரத நாரீமணிகளின் அரும்பெரும் வீரச் செயல்களை விவரித்துரைத்தது, அவர்களைப்போல நீங்களும் ஆயுதம் தாங்கி போர்புரிந்து ஆருயிர் துறக்கவேண்டும் என்பது குறித்தன்று; நமது தற்கால நிலையிலே—அடிமை வாழ்க்கையிலே—ஆயுத பலத்தால் பயன் பெறல் அரிதே! ஆதலின், நீங்கள் மேற்கொள்ள வேண்டுவது பிறர்க்குக் கேடு மறந்தும் சூழாத—பகைவர்களிடத்திலும் அன்பே பாராட்டும் சீரிய அஹிம்ஸா நன்னெறியே ஆம். உங்களது முன்னோரின் பெருவீரத்தை நன்கு உணர்ந்து, அத்தகைய தியாக புத்தியை—அஞ்சா உறுதியை—தளரா ஊக்கத்தைப்பெற்று, நமது செந்தமிழ் நாட்டின் முன்னேற்றந்திற்கு ஏற்ற சீரிய செம்பணிகளில் தலைப்பட்டு உற்சாகத்துடன் உழைக்க முன் வாருங்கள்! நமது பாரத மணித் திருநாட்டு அன்னை தனது உரிமை இழந்து உவகை ஒழிந்து விரிந்த குழலும் குலைந்த மனமும் கந்தைக்கலையும் நீர் வழியும் விழிகளும் உடையளாய் பெருந் துயர்க்கடலின் கரைகாணாது வருந்திக் கிடக்க, அவளது துயரை அகற்றக்கருதி சத்தியாக்கிரகத்தில் தலைப்பட்டு ஆயிரக்கணக்கான தேசபக்தர்கள் அருஞ் சிறைப்பட்டுள்ள இந்நாட்களிலே—நீங்கள் நவீன நாகரிக மயக்கம் மிகுந்தோராய் பகட்டுடைகளிலும் நல்லணிகளிலும் கருத்தைச் செலுத்தி தாய்நாட்டின் முன்னேற்றத்தில் கவலையின்றிக் காலம் கழிப்பதும் முறைதானோ? வீரத் தாய்மாரின் வழித்தோன்றிய உங்கட்கு, இதுவும் அழகேயோ? இனியேனும் உங்களது பேருறக்கத்தை விட்டொழித்து விழித்

தெழுந்து, கிராமங்கள் தோறும் தற்சமயம் இருந்து வரும் 'ஊர் வம்பளப்புச் சங்கங்க'ளை 'மாதர் முன்னேற்றச் சங்கங்க'ளாக மாற்றியமைத்து, இராட்டையில் நூல் நூற்றல், குடும்பத்தைத் திறம்பட நடத்துவதற்கேற்ற நல்லறிவை வளர்க்கக்கூடிய சீரிய நூல்களை ஆராய்ந்து உணர்தல், கல்வியறிவில்லாதவர்கட்குப் போதனை செய்தல், பிறரது தயவை எதிர்பார்த்து ஏங்கி நில்லாது தங்கள் பிழைப்புக்குத் தாங்களே வழிதேடிக் கொள்ளுமாறு பெண்களுக்கு ஏற்ற—கைத்தொழில்களைத் திறம்பட வளர்த்தல்—முதலிய பல திறப்பட்ட தொண்டுகளை செய்துவரக் கடவீர்களாக.

"பெருந் தடங்கட் பிறைநுதலார்க் கெலாம்—பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தது"—என்று கம்பர் கூறியதற் கிணங்க, செல்வத்தோடு சிறந்த கல்வியும் சேரப்பெற்றிருத்தலே சீரிய மாதர்கட்கு அழகாதலின், தற்காலத் தமிழகத்துப் பெண்தெய்வங்கள் அனைவரும், இயற்கை நெறிக்கும் இறைவனது நோக்கத்திற்கும் முற்றும் முரண்பட்டுப் பெண்மையின் பெருமை உணராது ஆடவரோடு போட்டி போடும் ஆர்வத்தை மூட்டும் அயல்நாட்டு நாகரிகக் கல்விப்பயிற்சிப் பித்தை விட்டொழித்து, நமது தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்கேற்ற தெய்விக—சுதந்தர—தேசீயக் கல்விப் பயிற்சியிலேயே தளரா உற்சாகத்துடன் ஈடுபட்டு இன்புற முன் வருவார்களாக. பெண்ணுலகு நல்வழியில் திருந்தி நடப்பின், ஆணுலகு தானே திருந்திச் சிறப்பெய்துவது உறுதி. பாரததேவி அருள் புரிக.

வந்தேமாதரம்.

---

அகங்காராதிகளோடு கடுமையாகப் போராடி ஆத்ம ஞானத்தையடையவேண்டி ஊக்கத்துடன் செய்யும் சாத்திர விசாரணையினாலும் சமாதி நிலைமை யடையப் படுகிறபொழுது, அகங்காரமானது தனது கூட்டத்துடனே மறைந்து விடுகிறது. ஆனால் சமாதி யடைவது மிகவும் கஷ்டம். அகங்காரம் பிடிவாதக் குணமுள்ளது. நாம் இவ்வுலகில் மறுபடியும் மறுபடியும் பிறக்கின்றதற்கு அகங்காரமே காரணம்.

பெயரையும் கீர்த்தியையும் நாடுகிறவர்கள் மாயைக் குட்பட்டவர்கள். எல்லா விஷயங்களையும் அமைத்து நடத்தும் பரமாத்மாவினால் எல்லாம் நடைபெறுகின்றன வென்பதையும், எல்லாப் பெருமையும் ஈஸ்வரனுக்கே உரியது, மற்றெவருக்கு மன்று என்பதையும் அவர்கள் மறந்து விடுகிறார்கள். "ஏ, ஈசுவரா! அது நீயே அது நீயே" என்று எப்பொழுதும் ஞானிகள் கூறுகிறார்கள்; ஆனால் அஞ்ஞானிகளும் மாயைக் குட்பட்டவர்களும் "அது நானே, அது நானே" என்று கூறுகிறார்கள்.

"நான் ஈசுவரனுக்கு அடிமை" என்று உறுதியுடன் கூறுகின்ற அகம்—பக்தனுடைய அகம்—ஞானம் பொருந்திய அகம், "பழுத்த அகம்" எனப்படுகிறது. —ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சர்.

# கலைமகள் விழா.



ஆசிரிய சகோதர, சகோதரிகளே! உலகில் அறிவு வளர்ச்சியின் சிறப்பையே முன்னேற்றமெனக் கூறுவர். அவ்வறிவின் அளவு கல்வியின் அளவைப் பொறுத்தது. கல்வியோவெனில், அவ்வந் நாட்டாசிரியத் தொழிலின் மேம்பாட்டிலமைந்து கிடக்கும். எனவே நமது நாட்டின் கல்வி வளர்ச்சிக்குச் சிறந்த காரணமாயிருப்பவர்கள் ஆசிரியர்களாகிய நீங்களே யாவீர்கள். சிறந்த முறையில் சிறுவர்களுக்குக் கல்வி பயிற்றுவிப்பினும் பொது ஜனங்களுக்குக் கல்வியில் தீவிர உணர்ச்சி ஏற்பட்டாலன்றி நாட்டின் கல்வி விரைவில் வளராது. **கல்வியில் தீவிர உணர்ச்சியைப் பொதுஜனங்களிடைப் பரவச் செய்தலும்** ஓர்வகை சிறந்த போதனைமுறை யென்று சொல்லுவதும் மிகையாகாது. தற்சமயம் நமது நாட்டின் கல்விக் குறைவிற்குச் சிறந்த காரணங்களாயுள்ள சிலவற்றில் பொதுஜனங்களிடைக் கல்வியில் தீவிர உணர்ச்சி ஏற்படாமையே முதன்மையானதாகும். நாட்டிற் கல்வியில் தீவிர உணர்ச்சியைத் தோற்றுவிக்கும் ஏதுக்கள் பலவற்றுள்ளும் **கலைமகள் விழாவும்** ஓர் சிறந்த ஏதுவாகும். **கலைமகள் பூசனையை** நடத்துபவர்கள் பெரும்பாலும் ஆசிரியர்கள்தான். அவ்விழாவைச் சிறந்த முறையில் நடைபெறச் செய்தால் நாட்டிற் கல்வி உணர்ச்சி பெருகும்; ஆசிரியர்களுக்குப் பள்ளிச் சாதனங்கள் வளரும்; தொழிலில் ஊக்கமுண்டாக்கும்; கலைப்பெருக்கம் நாட்டிலமைந்து நடனமாடும்.

இவ்வாண்டு புரட்டாசிமூ 23உ (8—10—32.) **சனிக்கிழமை** யன்று **கலைமகள் பூசனை நாள்** வருகின்றது. எல்லா ஆசிரியர்களும் தங்கள் தங்கள் பள்ளிகளில் வழக்கம்போற் **கலைமகள் விழாவைக்** கொண்டாடுவீர்கள்; ஆயினும் வெறும் பூசனைமட்டும் பொருளற்ற முறையிற் செய்யாமல், கிராம ஜனங்கள் வியக்கும் வண்ணம் கல்வியைக் குறித்த **தமிழ்ப் பாட்டுக்களைப்** பாடிக்கொண்டு **தமிழ்க்கொடிகளைத்** தாங்கிக் காலையிலும் மாலையிலும் பள்ளி மாணவர்கள் ஊர்வலம் வரச் செய்யவேண்டும். கொடி ஏற்றிக் **கொடி வணக்கம்** நடத்தல் வேண்டும். **பொதுக் கூட்டங்கள்** கூட்டி கல்வியைக் குறித்த பிரசங்கங்களும், சம்பாஷணைகளும், சிறு நாடகங்களும் நடைபெறச் செய்யவேண்டும்.

**மனமுண்டானல் வழியுண்டு.** நீங்கள் மனம் வைத்தால் இக்காரியங்கள் எளிதில் நடைபெறும். மதவேற்றுமைகளுக்கு ஈங்கிட மில்லை. நாமகள் விழாவிற்கு **"ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்!"** என்று பாரதியார் அறைகூவி அழைத்துக் கூறுவது, ஆசிரியர்களாகிய உங்களை நோக்கித்தான். உங்கள் உழைப்பினைப் பயனுள வழியிற் செலுத்துங்கள்; நாட்டின் கல்விப் பெருக்கத்திற்கு **நிதி மிகுந்தவர் பொற்குவை** தருவர்; **நிதி குறைந்தவர் காசுகள் நல்குவர்; நிதியில்லாதவர் வாய்ச் சொல் லருளுவர்;** ஆசிரியர்களின் பொருள் நிலை உயரும்; தொழின் முறை வளரும், மாணவர்கள் பல்குவார்கள்; பள்ளிகள் எங்கும் ஓங்கும்; கல்விப் பெருக்கெடுக்கும்; கலைத் தெய்வம் களித்து நடனமாடும்; **நமது நாடு முன்னேறும்.** நீங்கள் இவைகளை அறியா—

தவர்களல்லர். நினைப்பூட்டுதலாக உங்களுக்கு நாங்கள் வணக்கத்தோடு அறிக்கை செய்து கொள்ளுகிறோம். உங்களைக் கேட்டுக்கொள்ளும் விண்ணப்பம் எங்களுடையது. கைம்மாறு வேண்டாக் கடப்பாடு உங்களுடையது. இதுவே எங்கள் பிரார்த்தனை என கோவிற்பட்டி பிரசாரக் கமிட்டியார் அறிவிக்கிறார்கள்.

# நவராத்திரி மகிமை.

(வரகூர்-ச. நூரியநாராயண மூர்த்தி.)

நவராத்திரி என்பது புரட்டாசித் திங்கள் சுக்கிலபக்ஷ பிரதமை முதல் நவமி வரை கூடிய ஒன்பது தினங்களாகும். இத்தினங்களில் பகலிலும் விசேடமாக இரவிலும் பூஜை புரிவர். இராக்காலங்களில் புரியும் பூஜை ஈசுவரிக்கு விசேஷமானதால் இத்தினங்களுக்கு நவராத்திரி என்று பெயர் உண்டாயிற்று.

இது ஈஸ்வரியைக் குறித்து செய்யும் பூஜை. நவராத்திரி ஒன்பது நாட்களிலும் பிரம்மசாரிகளும், துறவிகளும், விதவைகளும், ரஜஸ்வலைகளும், மற்றுமுள்ள எல்லோரும் பகலில் ஒருவேளை போஜனம் உண்டு இரவில் மட்டும் உபவாசமிருந்து வருவார்கள். இதை அனுஷ்டிப்பவர்கள் எவ்விதமான கஷ்டமும் துக்கமும் அடைய மாட்டார்கள். இந்த விரதத்தால் அநேக பலன்களும் நல்ல சுகவாழ்வும் உண்டாகும்.

இந்த ஒன்பது தினங்களிலும் நியமமாய் விரதத்தை வகிக்க இயலாதவர்கள், பத்திரகாளி அநேககோடி யோகினிகளோடு தோன்றி தக்ஷயாகத்தை அழித்த தினமாகிய அஷ்டமி தினம் அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

நவராத்திரியின் கடைசி நாளாகிய நவமி திதியில் சரஸ்வதியை ஆராதிக்க வேண்டும். சரஸ்வதியை ஆராதிப்போர் மூல நக்ஷத்திரத்தில் சரஸ்வதியை ஆவாஹனம் செய்து பூராட நக்ஷத்திரத்தில் விசேஷமாய் பூஜித்து, உத்திராட நக்ஷத்திரத்தில் தூப தீப நைவேத்தியங்கள் புரிதல் வேண்டும். திருவோண நக்ஷத்திரம் முடியும்போது சரஸ்வதியை தனது ஸ்தானம் அடையும்படி விசர்ஜனம் செய்யவேண்டும். சரஸ்வதி பூஜை புரியும் நவமிக்கு "மஹா நவமி" என்று பெயர்.

ஆயுத பூஜையானது நவராத்திரியின் ஓர் பாகம். சரஸ்வதி பூஜையும் அன்றைய தினமே கொண்டாடப்படுகிறது. இது மகா சாத்துவிக பூஜையாகும். ஆன்றோர்கள் இலக்குமி, சரஸ்வதி, பார்வதி என்னும் மூன்று தேவிகளையும் வணங்குவார்கள். ஆயுதபூஜை அரசர்களுக்கே உரியது. ஆயுதம் என்பது போர்க்கருவிகளையே குறிக்கும். படி, மரக்கால், உலக்கை, மண்வெட்டி, கட்டப்பாரை முதலியன அல்ல. ஆகவே நமக்கு இலக்குமி பூஜை

யும் சரஸ்வதி பூஜையுமே உரியவை. எனினும் ஆயுதபூஜை புரிவது குற்ற மல்ல. ஆனால் நம்மவரிற் பலர் உண்மை யறியாதவர்களாய் ஆயுத பூஜை என்று கூறிக்கொண்டு ஆடு, கோழிகளை வெட்டி, பூஜைக்கு படைத்து, கள் கொண்டு ஆராதித்து உண்டு மகிழ்வர். இது வழக்கத்தின் பாற்பட்டதேயன்றி புராணங்களில் தக்க ஆதாரம் கிடைத்திலது.

நிற்க, நவராத்திரி முடிந்ததன் பிறகு அதற்கு மறுநாளாகிய தசமிக்கு "விஜயதசமி" என்று பெயர். இத்தினத்தில் தினகரன் மேற்கடலில் சாயும் போது வானத்தில் கொஞ்சம் நக்ஷத்திரம் பிரகாசிக்கும் தருணம் சந்தியா காலம் சென்ற பிறகு ஏற்படும் காலத்திற்கு "விஜயம்" என்று பெயர். இந்தக் காலமானது மக்களுடைய சகல கோரிக்கைகளையும் தர வல்லது. இத்தருணத்தில் எவரெவர்கள் தமக்கு நினைத்த காரியம் வெற்றி பெறவேண்டுமென்று எண்ணுகிறார்களோ அவர்கள் எல்லோரும் அவ்வேளையில் தமது இடத்தை விட்டு சிறிது தூரம் வடக்கி நோக்கி பிரயாணம் புரிதல் வேண்டும். தசமி திதியும் திருவோணமும் கூடிய தினத்தில் மாலை வேளையில் பிரயாணம் போனால் மிகவும் நல்லது.

மது என்னும் அசுரனை கொல்லும் பொருட்டு மேருபர்வதத்தில் மகா விஷ்ணுவும், விருத்தாசுரனை வதம் புரியும் நிமித்தம் இந்திரனும், விசுவாமித்திரர், பிருகு, வசிஷ்டர், காசிபர், பிருகஸ்பதி முதலிய முனிவர்களும் இந்த விரதத்தை அனுஷ்டித்து நற்பேறு பெற்றுள்ளார்கள்.

இராகவன் சீதா தேவியை இழந்து கிஷ்கிந்தையில் துக்கத்தைக் கொண்டுள்ளபோது நவராத்திரி விரதத்தை அனுஷ்டித்து சேது பந்தம் புரிந்து இராவணனை வென்று மிக்க மகிழ்வடைந்து உலக மக்களுக்கு திருப்தியை அளித்தார்.

இது பெண்மக்கள் அனுஷ்டிக்கப்பட வேண்டிய ஒரு சிறந்த விரதமாகும்.

விதிப்படி பிரதமை முதல் திரிதியை வரையில் உருத்திரி தேவியையும், சதுர்த்தி முதல் சஷ்டி வரையில் இலக்குமி தேவியையும், சப்தமி முதல் நவமி வரையில் நாமகளையும் பூஜித்து பின்பு இந்த விரதத்தை தசமி யன்று பூர்த்தி செய்தல் வேண்டும். அரசாட்சியை இழந்து வருந்திக் கொண்டிருந்த சுகேது என்னும் அரசனின் மனைவி துவேதியை ஆங்கீரச முனிவரது உபதேசப்படி இதனை அனுஷ்டித்தார். அதனால் அந்த அன்னைக்குப் பின்னர் சூரியப் பிரதாபன் என்னும் ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தை வய தடைந்ததும் தனது தந்தை இழந்த நாட்டைப் பகைவரிடத்திலிருந்து வென்று தாய் தந்தையர்களுடன் பலவித செல்வங்களையும் அடைந்து மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்ததாகக் கூறப்படுகிறது. இத்தகைய மகிமை பெற்ற விரதத்தை அனுஷ்டித்து வாழ்க்கையை மேன்மைப்படுத்துவது பெண்மக்களின் முக்கிய கடமை யாகும்.



# ஔவை யுண்ட விருந்து

(மிஸ். ஞானம்பாள்.)

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று."

என்பதே தமிழ் கண்ட பொதுமறையாகும். தான் உண்ணுகின்ற உணவு தேவருண்ணும் அமிர்தமாயிருந்தாலும், தன்னைத் தேடிவந்த விருந்தினர் தன் வீட்டின் புறத்திருக்கத் தான் மட்டும் உண்ணுதல் தகாததொரு செயலே யாம். தமிழகத்து மக்கள் தம் வாழ்க்கை விருந்தோடுண்ணும் வாழ்க்கை யாகவே அமைந்துள்ளது. தன்னகத்தே வாழும் இல்வாழ்வான்றன் சிறந்த தருமம் விருந்தோம்புதலேயாம். "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந் தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு," என்று தமிழ்ப்பெருமக னும் வள்ளுவர் அருளியிருக்கின்றார். இவ்வுண்மை உணர்ந்த தமிழக மக் களோ தம்மை யண்டிவரும் விருந்தினரையெல்லாம் உபசரித்து, வேண்டும் உண்டி முதலியன நல்குவதோடமையாது, அதன் பின் எப்போது விருந்தி னர் வருவார் வருவார் என்று எதிர்பார்த்து நிற்பர் என்பது யாமறிந்ததாகும். "தம்தமில்லிருந்து விருந்தொடும் தமரினோடும் அமுத உண்டி அருந்தும்" ஓசையே கோசல நாட்டில் எழுந்து நின்றது என்பர் கவியரசர் கம்பர். "விருந்து கண்டன்ன விழாவணி விரும்பும்" மக்களே கம்பர் கண்ட கோச லத்தில் நிறைந்திருந்தனர். தாமரைத் தடாகங்களிலே, அன்றலர்ந்த செந்தா மரையின் அணி கெழு நலன்களை விளக்க விரும்பிய கம்பர் "விருந்து கண்டு உள்ளம் களிக்கும் மங்கையர் முகமெனப் பொலிந்தன கமலம்" என்றே கூறு வாராயினர். தன்னகத்தே விருந்துண்ண, ஒருவர் வந்துளர் என்பதை அறிந்த மங்கையின் மனத்தெழுந்த உவகையை, அவள் தன் முகம்மலர்ந்து காட்டிற்று என்று கூறும் செவ்விய கவிநலம் நம்மைக் களிபேருவகைக் கட லுள் அழுத்துவதாகும். ஆனால் இவையெல்லாம் கவிஞர் கண்ட கனவாகும் என்று கருதவும் சிறிது இடமுண்டு.

இனி, தமிழகத்தின், செந்தமிழ் மூதாட்டியாம் ஔவையுண்ட விருந் தின் சிறப்புக்கள் சிலவற்றை ஆராய்வோம். ஔவையாரோ, நரையும் திரை யும் பெற்ற ஓர் பழுத்த கிழவி. ஆனால் அவர் அரசர் குழாத்திடையும், புல வர் கூட்டத்திடையும் நெருங்கிப் பழகியவர். எனினும் அவர் நடாத்திய வாழ்க்கை எளிய வாழ்க்கையாகவே அமைந்துள்ளது. அவர் நாட்டின் ஏழை மக்களுடனேயே பெரிதும் பழகி, அவர்களது வாழ்க்கையையே தமது வாழ்க்கையாகக் கொண்டு நடத்திவந்தார் என்பதை அவர்தம் கவியுணர்ந்த பலரும் அறிவர். "உப்புக்கும் பாடி, புளிக்கும் ஒரு, கவிதை ஒப்பிக்கும்" அவர்தம் உள்ளத்தை அறியாதார் யாரே. கூழுக்குப் பாடிய பெருமையே இக்கூனற் கிழவியின் பெருமையாம். இவர் அரசரை அண்டிய பொழுதும், பின்னர் ஏழை மக்களை அண்டிய பொழுதும், இருவகுப்பினரும், இவரை

யழைத்து உணவருத்திய முறைகளை அவர் தம் செவ்விய செய்யுட்களில் அமைத்துக் கூறும் முறை அழகுடையதாகும்.

தமிழ் வேந்தரில் தலைமகனான பாண்டிய அரசனது அரண்மனையில் மணவினை யொன்று நெருங்கியது. அம்மணவினையைக் காணவும், அங்கு விருந்துண்ணவும் ஔவை அழைக்கப்பட்டிருந்தார். குறிப்பிட்ட காலத்தில், ஔவை பாண்டியன் அரண்மனையை அணுகினார். அரசவையிலோ பெரியதொரு கூட்டம் கூடியிருந்தது. ஔவையின் கோலத்தைக் கண்டவர், இவர் அரசனது விருந்தினர் என்று எண்ணவில்லை. இவர் கூட்டத்தைக் கடந்து உள்ளே சென்று பாண்டியனை அடைய விரும்ப, அங்கு நெருக்குண்டார். பிறரால் தள்ளுண்டார், விரும்பிவந்த விருந்துண்ணாத காரணத்தால் பசியினால் சுருக்குண்டார். ஆனால் சோறு மட்டும் உண்டாரல்லர். இதை நகைச் சுவையுடன் ஔவை கூறும் முறை அழகுடையதேயாகும்.

"வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்
துண்ட பெருக்க முரைக்கக் கேள்—அண்டி
நெருக்குண்டேன், தள்ளுண்டேன், நீள் பசியினாலே
சுருக்குண்டேன் சோறுண்டிலேன்."

என்பது ஔவை யருளிய அழகிய பாவாகும். இப்பாவினை உற்று நோக்கும் அன்பர்கள், தற்காலத்து நடக்கும் விருந்தின் முறைகளுக்கு இவ்விருந்தின் முறை எவ்வளவு பொருத்தமாய் அமைந்துள்ளது என்பதை அன்பர்கள் அறிவார்கள். பணம் படைத்த செல்வர்கள் வீட்டில் விருந்தென்றால் ஏழைகட்கு உணவு கிடையாது. பொன்னும் மணியும் புனைந்து, பட்டுந் துகிலும் தரித்துச் செல்லும் செல்வர்கட்கே விருந்து நடக்கும், மேலாடையற்ற ஏழை மக்களின் பசியைத் தணிப்பார் ஒருவருமிலர். நிற்க,

தமிழறிந்த தலைமகனான பாண்டியன் வீட்டில் ஔவையுண்ட விருந்தின் பெருமை இது வென்றால் தமிழருமை அறியாத மற்றையோர் வீட்டில் எத்தகைய உபசாரம் ஔவைக்கு நடந்திருக்கும் என்று கூறுவது மிகையேயாகும். இந்த ஔவை இனி யொரு பிரபுவை அணுகுகின்றார் அப்பெருமகனோ செவ்விய உள்ளத்தன், விருந்தினரை உபசரிக்க வேண்டும் என்றும் அவா மிகவும் உள்ளவன் எனினும் மனைவிக்கு அடங்கிய பேதையாதலின் எண்ணியவாறே யாற்றும் இயல்பில்லாதவன். இவன், கோலூன்றி, நடை தள்ளாடி, நரையுடனும், திரையுடனும் வரும் நம் ஔவையைக் கண்டு, தன்னகத்திற்கு அழைத்தேகி அவளைப் புறத் திண்ணையில் இனி தமர்த்தி வீட்டினுட் சென்றான். சென்றவன் தன் மனைவியை அணுகி, விருந்தொன்று வந்துளது, அதனை யுண்பிக்கவேண்டும் என்று சொல்ல அஞ்சியவனாய் அவளுக்கு வேண்டும் நலன்கள் பலவற்றையும் செய்ய முற்பட்டான். தன் மனைவியின் பக்கம்போயிருந்து, அவள் தன் மோவாயைப் பிடித்துக்கொண்டு அவள்தன் தலையிலுள்ள ஈர் பேன் முதலியவைகளைப் பொறுக்கி யெடுத்து, மற்றும் அவள் வேண்டும் பணிவிடைகள் செய்து கடைசியாகக் காதொடு காதாக விருந்தொன்று வந்துளது என்று மெதுவாகக் கூறினான். இதைக் கேட்ட அத்தாடகாபிராட்டியின் தங்கை, தலைவிரித்தபடி, தன் தலைவனைக் கண்டபடி பேசியதோடமையாது, வீட்டினுட் கிடந்த பழையதொரு முறத்

தால் அவன் வீட்டைவிட்டு ஓடும்வரை சாடினாள். இதை யறிந்த ஔவை யும், தமக்கும் பழமுறப் பூசை கிடைக்கும் என்று கருதி எழுந்து சென்று விட்டார். இவ்வரலாற்றை,

"இருந்து முகந்திருத்தி யீரோடு பேன்வாங்கி,
விருந்து வந்ததென்று விளம்ப—வருந்திமிக
ஆடினாள் பாடினாள் ஆடிப் பழமுறத்தால்
சாடினாள் ஓடோடத் தான்"

என்ற செய்யுளில் ஔவையார் அமைத்துக் கொடுக்கின்றார்.

ஆகவே ஔவையுண்ட விருந்தெல்லாம் இத்தன்மையனவே என்று அன்பர்கள் கொள்ளுதல் கூடாது என்று கருதி, அவர் உண்ட விருந்துகள், இரண்டின் சிறப்பையும் எடுத்துக் கூறுதும். இந்நரை மூதாட்டி, ஓர் ஏழைக் குடியானவனது வீட்டை அணுகினார். அவ்வீட்டில் தலைவனும் தலைவி யும் ஒத்த அன்புடையவர்களாய் வாழ்ந்து வந்தார்கள். ஔவை வந்ததை அறிந்த அவ்வில்லாள், வந்த விருந்தை அன்புடனழைத்து, உபசரித்து, அன்று தன் வீட்டில் சமைத்திருந்த கீரைக் கறியுடன் கூடிய உணவைப் பரிமாறி னாள். பரிமாறும்பொழுதே, "அம்மையே எங்கள் வீட்டில் இவ்வுணவையும் கீரைக் கறியையும் தவிர வேறு உணவில்லையே, என்செய்வோம்" என்று பல சொல்லி, வந்த விருந்தினரைத் தக்கபடி உபசரிக்க முடியாத தனது நிலைமைக் காகப் பெரிதும் வருந்தினாள். ஆனால் ஔவைக்கோ அக்கீரைக் கறி சூடாயும் நறுமணங்கமழ்ந்ததாயும், வேண்டும் அளவு தின்னத்தக்க ருசியுடையதாயும், நெய் கலந்ததாயும், தக்க பக்குவத்தில் சமைக்கப்பெற்றிருந்ததாயும், இருந்த தால் அது கீரையுணவு என்று கருதவே இடமில்லை. தேவருண்ணும் அமுத மும்,இக்கீரைக் கறிக்கு ஒப்பாமோ என்னும் நிலையில்தான் அவ்வுணவு அமைந் திருந்தது.

"வெய்தாய், நறுவிதாய், வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறம்பசந்த—பொய்யா
அடகென்று சொல்லி அமுதத்தையிட்டார்
கடகஞ் செறிந்த கையால்,

என்று ஔவை கூறும் செய்யுள் அழகுடையதாகும்.

இனி, இந்த ஔவையே வேலூரில் வசித்துவந்த பூதன் என்பவனது இல்லத்தை அடுத்துச்செல்ல, அவன் நம் நன் மூதாட்டியைக் கண்டு வணங்கி, வீட்டினுள் அழைத்துச் சென்று வரகரிசிச் சோறும், கத்தரிக்காய் பொறிய லும், முரமுரவெனவே புளித்த மோரும் கலந்து, அன்புடன் இட்ட அடிசிலை உண்டு மகிழ்ந்தார். இவ்வாறு வேலூர்ப் பூதனிட்ட சோறு, சாதாரணமாக, வடை பாயசத்துடன் நாம் பெறும் உணவைப்போல் ஆறு அணா விலை பெறத் தக்கதுதானா என்றால், அன்று அவ்வுணவு இம்மூன்று உலகத்தையும் சேர்த்து விலை பேசினால் என்ன விலை பெறுமோ அந்த விலையும் பெறும் அதற்கு மேலும் பெறும் என்பதில் ஐயமில்லை.

வாகரிசிச் சோறும், வழுதுணங்காய் வாட்டும்
முரமுரெனவே புளித்தமோரும்—திரமுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்ந்து பரிந்திட்டவமுது
எல்லா உலகும் பெறும்"

என்பது ஔவை செய்யுள். புகழ்ந்து பரிந்து அன்புடன் வேளூர்ப் பூதனிட்ட சோறு இத்தகையதென்று உரைத்த ஔவையே, மற்றொருவிடத்து, தலைவனது கட்டளைக்காக அடங்கி, தலைவி யொருத்தி அன்பில்லாது இட்ட அமுதை,

"காணக்கண் கூசுதே, கையெடுக்க நாணுதே
மாணொக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி எரியுதே ஐயையோ
அன்பில்லாள் இட்ட அமுது"

என்று வருந்தியுரைக்கின்றார்.

ஆகவே, ஔவையுண்டவிருந்தின் திறம் எத்தன்மையது என்றிதுவரைப் பார்த்தோம். இனி, விருந்தோம்புதலைப்பற்றி ஔவை கொண்டுள்ள கருத்துத்தான் என்னை என்பதை விளக்க அவள் அருளிய செய்யுள் ஒன்றை மட்டும் கூறி நிறுத்துகிறேன். இவ்வுலக முழுவதும் ஒருவயலாயும், அவ்வயலில், பொன்னும் மணியும், முத்தும் பவளமும் விளைந்து, அவ்விளை பொருள்களையெல்லாம் சேர்த்துவைக்க வானுலகே சேரியாக அமையும்படி அருளி, அவ்வாறமைந்த ஒரு செல்வம், ஒருவனுடையதாக அமைந்திருக்க வேண்டும் பாக்கியம் பெற விரும்பினால் அவன் ஒருநாள்—ஒரு பொழுது—ஒருவன் உணவு உண்ணாது பட்டினிகிடப்பதைப் பார்க்கத் தயாராயிருக்க வேண்டும் என்பது நீதியானால், அப்பாக்கியம் பெறவிரும்பாதிருத்தலே போற்றத் தக்கதாகும் என்று பொருள்பட,

"வையகம் எல்லாம் வயலாய் வானோர்
தெய்வ மாமுகுடு சேரியாகக்
காணமு முத்தும் மணியும் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினும், ஒருநாள்—
ஒருபொழுது—ஒருவன்—ஊண் ஒழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லாதென்னு மென்மனனே
நேர்நிறை நில்லாதென்னு மென்மனனே"

என்னும் செய்யுளை அருளினர் ஔவையார். ஆகவே, அளவற்ற செல்வமும், விருந்தோம்பா வாழ்க்கையும் பெறுவதைவிட, குறைந்த செல்வமும், விருந்தோம்பும் வாழ்க்கையும் பெறுவதே சிறந்ததாகும் என்பது வெள்ளிடைமலை.

ஔவையுண்ட விருந்தின் நலங்கண்டு மகிழ்ந்த அன்பர்கள் என்றன் குறை கண்டு கவலாதிருப்பாராக—நலம்—



# சில உபதேச மொழிகள்

(வீ. சங்கர ஐயர்)

ஸத்ஸங்கத்தை அடிக்கடி தேடவேண்டும். ஸாதுக்களுடைய ஸங்கமானது பாபத்தைப் போக்கக்கூடியதென்று நினைக்க வேண்டும்.

2. கூடிய வரையில் பிறருடைய அன்னத்தைச் சாப்பிடாமலிருக்க வேண்டும். பிறருடைய அன்னம் இலவசமாய்ச் சாப்பிட்டால் அம்மட்டில் நாம் அவருக்கு கட்டுப்பட்டவராகி அவருடைய பாபங்களில் ஒரு பாகத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டி வருகிறது.

3. கூடியவரையிலும் சரீரத்தாலும், மனத்தாலும், பணத்தாலும் நாம் பிறருக்கு உதவி புரியவேண்டும். அதுவும் 'பாத்திரமறிந்து பிச்சையிடு' என்றபடி செய்யும் உதவி உபயோகமுள்ளதாயிருக்க வேண்டும். உதாரண மாகக் கட்குடியனுக்கு பணத்தால் உதவி செய்யக்கூடாது.

4. பெரியோர்களை ஒரு பொழுதும் அவமதிக்கக் கூடாது. அவர்கள் சொற்படி நடக்கவேண்டும். — பெரியோர்=புத்தியிற் பெரியோர் என்று பொருள்.

5. ஒவ்வொரு நாளும் கடவுளுடைய பெருமைகளடங்கிய புஸ்தகங் களைச் சிறிது நேரமாகிலும் படிக்க வேண்டும்.

6. உயிர்தரிக்க உண்ணவேண்டுமே தவிர உண்பதற்காக உயிர் தரிக் கக்கூடாது.

7. பிரதி தினமும் காலையிலும் மாலையிலும் குறைந்தபக்ஷம் அரைமணி நேரமாவது யோகாப்பியாசம் (தேகப் பயிற்சி) செய்ய வேண்டும். காலையில் 108 தடவை யாவரும் 7-மணிக்கு முன் சூரியனை நோக்கி சூரிய நமஸ்கார மும், மாலையில் கோயிலுக்குப் போய் 108 நமஸ்காரமும் செய்வது மிகவும் நலம். ஸாஷ்டாங்க நமஸ்மாரத்தின் மகிமை 1000 நாவு படைத்த ஆதிசேஷ னும் கூறமுடியாது.

8. தேகப்பயிற்சி செய்யும் முன் கைகால்களை சுத்தி செய்துகொள்ள வேண்டும்.

9. ஒரு வஸ்துவினிடத்திலும் அல்லது ஒரு ஜந்துவினிடத்திலும் அதிகப் பிரியம் வைக்கக் கூடாது; அப்படி அதிகப் பிரியம் வைத்திருந்து அவ்வஸ்து காணமல் போய்விட்டால் அது மனதுக்குப் பெரும் துக்கத்தை உண்டுபண்ணும்.

10. இச்சைகள் மனதில் உண்டாகும் பொழுதே அகற்றப் பாடுபட

வேண்டும். 'ஊறும் பொழுது துடைத்துவிடு' என்பது பழமொழி. இச்சையை வளரவிடக் கூடாது.

11. திரிகரணங்களாலும் பிறருக்கு ஒருகாலும் துக்கத்தைக் கொடுக்கவே கூடாது. கூடுமானல் க்ஷேமத்தையே செய்யவேண்டும்.

12. நம்முடைய கடமைகளில் சிறிதளவும் பிசகக் கூடாது. கால அளவு தவருமல் நடக்க வேண்டும்.

13. நமக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியது கிடைக்கா விட்டால் அதைக் குறித்து தினமும் கடவுளிடம் முறையிடு. ஒருகாலும் மனிதர்களிடம் கூருதே. அவர்கள் நாமில்லாத வேளைகளில் நம்மைத் தூஷிப்பார்கள்.

14. "நான்" என்ற அகங்காரத்தை ஒழித்துவிடு. கடவுளின் ஒரு அம்சமே உலகம் என்றும் அதில் பல்லாயிரத்தில் ஒரு பாகமே நாம் என்றும் அறியவேண்டும்.

15. நமக்கு எதிரி என்று எவன் நினைக்கிருனே அவனுக்கே நாம் முதல் உதவிசெய்யவேண்டும். எதிரிக்குக் கெடுதல் நினைப்பவன் அதமாதமன்.

16. கொலை, களவு, கட்குடித்தல் முதலிய பஞ்சமகா பாதகங்களைச் செய்பவர்களை அகற்றவேண்டும். 'சேராத இடம் தன்னில் சேரவேண்டாம்' "பனைமரத்தடியிலிருந்து பால் குடித்தாலும் பிறர் நம்மைக் கள் குடித்ததாகவே எண்ணுவார்கள்." ஒருவனை அவன் சினேகிதர்களிடமிருந்து அவன் எப்பேர்பட்டவன் என்று அறிய முடியும்.

17. அப்பேர்பட்டவர்கள் என்று தெரியாமல் சினேகித்து விட்டாலும் தெரிந்தவுடன் சமாதானமாக அவர்களை ஒதுக்கிவிட வேண்டும்.

18. பிறரைத் தூஷிப்பதில் நேரத்தை போக்கக் கூடாது. அதனல் வீண் மனஸ்தாபங்கள் உண்டாகக் கூடும்.

19. அகாரணமாக விதண்டாவாதம் செய்யக் கூடாது.

20. யார் என்ன சொன்னுலும், எப்படி நமக்குக் கோபத்தை மூட்டும் படிச் செய்தாலும், நாம் கோபத்தை மட்டும் அகற்றவேண்டும் "கோபம், பாபம், சண்டாளம்."

21. பொருள் விஷயமான தர்க்கத்தில் தனக்குச் சிறிது நஷ்டமேற்படக் கூடியதாகவிருந்தாலும் கூட அதைக் கவனிக்காமல் கூடியவரை சமாதானப் படுத்தவே முயல வேண்டும்.

22. அன்னிய ஸ்திரீகளுடன் ஒருகாலும் ஏகாந்தமாக உட்கார்ந்து பேசக்கூடாது. இல்லாவிட்டால் வீண் அபவாதங்களுக்கும் சண்டைக்கும், காரணமாகும்.

23. நாடகங்கள் சினிமாக்கள், கூட்டங்கள், கடைத்தெருவுகள், சந்தைகள் இவைகளுக்கு காரியமிருந்தாலன்றி செல்லக்கூடாது. இதனல் வினையும் தீங்குகள் பல. ஆகையால் கூட்டங்களில் ஜாக்கிரதையாகச் செல்ல வேண்டும்.



# உலக அநுபவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

இந்தத்தீண்டாமைப் பேயைப் பற்றிச் சிறிது சொல்லலாமெனத் தோன்றுகிறது. சில நூற்றாண்டுகளுக்குமுன் 'யூதர்' என்னும் ஜாதியாரை இம்சிப்பது ஐரோப்பியருக்கு விளையாட்டாயிருந்தது. யூதர்கள் பாலஸ்தீனு என்னும் இயேசு பிறந்த தேசத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களே இயேசுவைச் சிலுவையிலிட்டுக்கொன்றவர்கள். அதன்பிறகு அவர்கள் நாட்டை யிழந்து உலகெலாம் சுற்ற ஆரம்பித்தார்கள். வியாபாரத்தில் இவர்களுக்கு நிக ரில்லையெனலாம். இவர்கள் தம்முடைய சாமர்த்தியத்தால் விசேஷ பணம் சம்பாதித்து அரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் கடன் கொடுத்து வந்தார்கள். அநேக சந்தர்ப்பங்களில் அரசர்கள் இவர்களைச் சிறையிட்டுப் பலவித கொடு மைகளுக்குட்படுத்திப் பணத்தைப் பறிப்பார்கள். "நாதனற்று ஊரூராய்த் திரி வார்கள்" என்று கடவுள் இவர்களைச் சபித்திருக்கிறார் என்ற வேதவாக்கியத் தைப் பிரமாணமாகக் கொண்டு இவ்வாறு செய்தார்கள். இந்த யூதரில் ஒருவ னை 'ஷைலாக்' என்பவனே ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில காளிதாஸர் இயற்றிய 'வெனிஸ் வர்த்தகன்' நாடகத்தில் கடன் கொடுப்பவன். இவனே அன்டோனியா என்னும் வர்த்தகனுக்கு 3000 பவுன்கள் கடன் கொடுத்து வட்டிக்குப்பதிலாக, கடன் மூன்று மாதத்திற்குள் கொடுக்காவிட்டால் அவன் மார்பிலிருந்து ஒரு பவுன் எடை சதையைக் கொடுக்கவேண்டுமென்றும் பத் திரம் வாங்கிக்கொண்டவன். (இக்கட்டத்தைத் தனியே எழுதினால் வெகு ஸ்வாரஸ்யமாயிருக்கும். கூடிய சீக்கிரத்தில் இந்நாடகத்தினின்றும் முக்கிய களங்களை மொழிபெயர்த்து எழுத உத்தேசித்திருக்கிறேன். இவன் ஒரு சந்தர்ப்பத்தில் என்ன சொல்லுகிறான் பாருங்கள். "யூதனுக்குக் கண்ணில் லையா, காதில்லையா. குத்தினால் அடித்தால் நோகாதா? எங்களுக்கும் உங்களைப் போல் வியாதிகள் உண்டாவதில்லையா? கிறிஸ்தவரைப்போல நானும் மனி தன்தானே."

தீண்டாதார் என்னும் மாந்தரும் மனிதர்தானே. தீண்டுபவரைப்போல பசி, தாகம், முதலியன உண்டு. மழை பெய்தால் அவர்களுக்கும் குளிர் உண்டு, தேகம் நனைந்துபோகும். வெய்யிலின் கொடுமை அவர்களுக்கும் தெரி கிறது. ஏன் அவர்களை மாத்திரம் தனியே வைக்கவேண்டும்? அவர்கள் பரம் பரை வேறெனச் சிலர் அபிப்பிராயப்படலாம். இருந்தாலென்ன? வெள்ளைக்

காரரும் நாமும் ஒரே பாரம்பரியமா? எனினும் அவர்களைத் தொட நாம் பின் வாங்குவதில்லை. ஆனால் ஒரு வித்தியாசம். வெள்ளைக்காரருக்கு நாம் அடிமையானதால் அவர்கள் நம்மைத் தொட அனுமதி கொடுப்பதையே ஒரு பெரும் பதவியாக நாம் நினைக்கிறோம் போலும்! இத்தீண்டாதாரும் அப்படி ஒருகால் நமக்கு மேலே போய்விட்டால், ஒன்று அவர்கள் நமது மீது தயை கூர்ந்து நம்மைத் தொடச் சம்மதிக்க வேண்டும், அல்லது நாம் தற்காலம் அவர்களை நடத்தும் முறைக்குப் பிரதியாக நம்மைத் தீண்டாதாரென்று பாராட்ட வேண்டும்! ஆனால் பின் சொன்ன மாதிரி அவர்கள் நம்மைச் செய்யமாட்டார்களென்பது திண்ணம். அவர்களுக்குத் தெரியும் தீண்டாமையின் அவஸ்தை. அவர்கள் நம்மை விட மேம்பாடடைவது அசாத்தியமல்ல. மேற்சொன்ன யூதர்கள் எல்லோராலும் இகழப்பட்டு தாழ்ந்தஸ்திதியில் ஒரு காலத்திலிருந்தது போக தற்காலத்தில் உன்னத பதவியிலிருக்கின்றனர். உதாரணமாக சில வருஷங்களுக்கு முன் உலகத்தில் எல்லாரிலும் பணக்காரர் என்று பெயர் பெற்ற மோஸஸ் ராத்ஸ்சைல்ட் (Moses Rothschild) என்பவர் ஒரு யூதர்தான். நமது தேசத்து ராஜப்பிரதிநிதியாகவிருந்த லார்ட் ரீடிங்கும் ஒரு யூதரே. நமது சென்னை மாகாண கவர்னராயிருந்து ராஜப் பிரதிநிதி பட்டத்தையும் சில காலம் வகித்த லார்ட் கோஷன் பிரபுவும் யூதர், ஜர்மனி தேசத்தின் பிரபல ரஸாயன சாஸ்திரியும் ஸர். ஐசக் நியூடன் என்பவர் கண்டுபிடித்த விசேஷ 'ஆகர்ஷண சக்தி' (Gravitation) என்பதைத் தப்பென்று கண்டுபிடித்தவருமான ஐன்ஸ்டைன் (Einstein) என்பவரும் யூதரே. இன்னும் அனேக யூதர்கள் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் விசேஷ செல்வாக்குடனிருக்கிறார்கள். அதே மாதிரி தீண்டாதாரில் பலரும் சமயம் வந்தால் நல்ல ஸ்திதிக்கு வரலாம். அமெரிக்காவிலிருக்கும் வெள்ளைக்காரர் நீக்கிரோவரை ஒன்றுந் தெரியாத காட்டுமிராண்டிகளென நினைத்திருந்தனர். ஆனால் தற்காலம் அவர்களிலும் அனேகர் வெள்ளைக்கார நாகரிகத்தைக் கைக்கொண்டு, உயர்தரக்கல்வியைப் படித்துத் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள். எதற்கும் சமயம் வாய்த்தால் அனுகூலங்கள் உண்டாகும்.

தீண்டாதாரை ஊருக்குள் விடுவதில்லை. நல்ல ஜலம் கிடையாது. நல்ல உணவு கிடையாது. நல்ல ஆடைகள் கிடையா. அவர்கள் சண்டாளர்களென்றும், பாபிகளென்றும் கிட்ட வந்தால் அந்த சண்டாளத் தன்மை நம்மைப் பிடித்துக்கொள்ளும் என்றும் பயப்படுகிறோம். இவர்கள் பாபிகள் வம்சமென்றே வைத்துக்கொள்வோம். எந்தக் காலத்திலோ மூதாதைகள் பாபிகளென்றால் இப்போது இவர்களைக் கண்டனம் செய்யலாமா? ஒரு மனிதனைக் குற்றவாளியென்றும் பாபியென்றும் தீர்மானிப்பதற்கு முன் எவ்வளவோ விசாரணைகளை நடத்துகிறார்கள். இயேசு ஒரு முறை பிரசங்கம் செய்துகொண்டிருந்தபோது அவரைப் பரீக்ஷிக்குமாறு சில பரிசேயர்கள் ஒரு தாசியை அவர் முன்னிலையில் நிறுத்தி "ஐயா இவள் வியபசாரி. நாங்கள் கண்ணாரக்கண்டோம். இவளைக் கல்லாலடிக்க வேண்டாமா" என்றார்கள். இயேசு மறுமொழி பகராமல் கையிலிருந்த தடியினால் தரையில் கோலம் போட்டுக்கொண்டு "உங்களில் யார் பாவஞ்செய்யாமலிருக்கிறானோ அவன் இவள்மீது கல்லை யெறியட்டும்" என்று குனிந்த தலை நிமிராமல் சொன்னார். இது சாக்ஷாத் பாபிகளைப்பற்றியாயின் அவருடைய வம்சத்தார் விஷயத்தில் பொருந்தவே பொருந்தாது. மனிதன் வெளிக்கு எவ்வளவு பயபக்தியுடனிருப்பதாகத் தோன்றினாலும் அந்தரங்கத்தில் என்ன தீயச் செய்கைகளைச்

செய்ய உத்தேசிக்கிருனே? 'நான் யோக்கியன்' என்று சொல்லக்கூடிய மனிதர் வெகு வெகு சிலரே என்பதிற் சந்தேகமில்லை. ஒருவனுடைய பாட்டன் துரோகி, கள்ளன், கொலை செய்தவன் என்ருல் அவனுடைய பேரனைத் தண்டிப்பது நியாயமாகுமா? எத்தனையோ யுகங்களுக்கு முன் ஒருவன் பாபம் செய்தானே செய்யவில்லையோ கடவுளுக்குத் தான் வெளிச்சம்! அப்படியிருக்க அவனுடைய தற்காலத்து வம்சத்தவனைப் பழிப்பது நியாயமென்று எந்த மனிதனும் சொல்லான். ஆதி சங்கரரும் இந்த சண்டாளத் தீண்டாமையைக் கருதினதாகத் தெரிகிறது. ஒருசமயம் அவரிடம் ஒரு சண்டாளன் போனதாகவும் அவனை விலகிப் போகச் சொன்னதாகவும், அவன் "என்ன! தேகம் அநித்தியமென்றும் ஆத்மாவே பிரம்மம் என்றும் வாதிக்கும் உமக்கும் பேதமுண்டோ?" என்ருனும். சங்கரரும் வெட்கமுற்று அவனை ஆதரித்து ஞானத்தைப் போதித்தாராம். சாக்ஷாத் ஈஸ்வரனே சிருஷ்டிக்குக் காரணமாயின் ஒரு சிருஷ்டிக்கும் இன்னென்றுக்கும் எப்படி பேதமிருக்கக் கூடும்? கபிலர் தமது அகவலில் எழுதியிருப்பதுபோல் மேல் நான்கு ஜாதிக்குணவு நாட்டிலும் கீழ் நான்கு ஜாதிக்குணவு காட்டிலுமோ? ஒருவனுக்கு விஷம் இன்னெருவனுக்கு அமிர்தமோ?

அப்படியே பாபிகளாயினும் அவர்களை நாம் ஆதரிக்காமல் விட்டு விட்டால் இன்னும் அதிகமாகப் பாபத்தொழிலையே செய்வார்கள் என்பது திண்ணம். மனிதனுடைய நடவடிக்கைகள் அவனுடைய இருப்பிடத்தைப் பொறுத்தன. ஒரு வேடன் இரண்டு கிளிகளைப் பிடித்தானும். ஒன்று தப்பி ஓடிவிட்டதாம். இன்னென்றைக் கசாப்புக் கடையில் விற்ருனும். முதல் கிளி ரிஷீஸ்வரர்களிருக்குமிடத்தை யடைந்ததாம். சில தினங்கள் சென்றன. வேடன் காட்டுமார்க்கமாய்ப் போகையில் மரத்தின்மீது ஒரு கிளியைக் கண்டான். அது ரிஷீஸ்வரரிடமிருந்தது. "ஸ்வாமீ! வாருங்கள். இளைப்பாறுங்கள். சற்றே தாகசாந்தி செய்து கொள்ளும்" என்றது. ஆச்சர்யத்துடனே வேடன் பின்னும் நடந்தான். அங்கு இன்னெரு கிளியிருந்தது. அது கசாப்புக் கடைக்காரனது. "யாரடாவன்! போ, போ, மூஞ்சிமேலே அடிப்பேன் போ" என்று இதுபோல் சொல்லிற்று. இதெல்லாம் சகவாச தோஷம். துர்நாற்றத்தையே சதா முகர்ந்துகொண்டு, அசுத்த உடையே சதா உபயோகித்துக்கொண்டு, குளிப்பதற்கும் தண்ணீர் போதுமானதில்லாமல் பட்டணங்களில் சாக்கடையோரங்களிலும் கிராமங்களில் ஊருக்கு வெளியில் அசுத்தமான இடங்களிலும் வசித்து வந்தால் அவர்களுக்கு எப்படி கதி மோக்ஷமுண்டு, எப்படி அவர்கள் முன்னேற்றமடைவது, எப்படி மற்றவர்களைப்போல் "நல்லவர்"களாவது? காட்டு யானைகளைப் பழக்குவதற்கு பழகிய யானையொன்றைத் துணை கொள்ளுகிருர்கள். எதற்கும் உபாத்தியாயரும் உதாரணமும் இருக்கவேண்டும். ஒருவனை நல்லவனக்க நல்லவர்களைக் காணவும், அவர்களோடு பழகவும் விடவேண்டும். புலியையே பார்த்திராத ஒருவனை "புலியைப்போல் சித்திரம் எழுது" என்ருல் அவனுக்கு எப்படி சாத்தியமாகும்? நல்லவர்களென்று நாம் கருதுவோரைத் தனியே வைத்து விட்டு தீண்டாதவரை "நல்லவர்களாய்விடுங்கள்" என்ருல் எப்படி முடியும்? ஒருவனுக்கு நல்லதென்று தோன்றுவது இன்னெருவனுக்குத் தவருயிருக்கலாம். உதாரணமாக மேனுட்டில் ஒருவரை யொருவர் சந்திக்கும்போது தலையிலிருந்து தொப்பியை எடுத்துவிடுவார்கள். நமது தேசத்தில் தலைப்பாகையோ தொப்பியோ போட்டுக்கொண்டிருப்பதே மரியாதை. மேனுட்டில்

ஸ்திரீ புருஷ பேதமின்றி கை குலுக்குதல் சம்பிரதாயமாயிருக்கிறது. நமது நாட்டில் அன்னிய ஸ்திரீயின் கையைக் குலுக்கினால் பெரிய தவறாய்விடும். ஜப்பானில் முத்தமிடுவது பெரிய தவறாம்! நாம் 'நல்லவனாயிரு' என்று சொல்லிவிட்டால் போதாது. 'நல்லவன்' என்றால் என்ன அர்த்தமென்றும் நல்லவனாகவும் இருந்து காட்டினால்தான் சரியாகும்.

தற்காலத்தில் கைதிகளை நடத்துவவதிலும் ஒரு புதிய ஏற்பாடு வந்திருக்கிறது. முன்போல அவர்களைச் சிறையில் அடைத்து மனிதரைப் பார்க்கவொட்டாமல் வைப்பதில்லை. அவர்களுக்கு ஒரு தொழிலைக் கற்பித்து உபன்னியாசங்கள் முதலியன கொடுத்து யோக்கியமானவர்களோடு பழகவும் விடுகிறார்கள். பைத்தியம் பிடித்தவர்களைத் தனியே வைத்தால் பைத்தியம் முற்றிவிடும். ஆகவே அவர்களை அடிக்கடி சமுத்திரக்கரை, முதலிய ஜன சஞ்சாரமான இடங்களுக்குக் கொண்டுபோவதோடு பாட்டு, பத்திரிகை முதலியவற்றையும் வழங்குகிறார்கள். இப்படிக் கைதிகளையும் ரோகிகளையும் நடத்தும்போது, ரோகமும் கொடுந்தொழிலும் இல்லாத மனிதரோடு பழக என்ன ஆக்ஷேப மிருக்கிறது?

(தொடரும்)

# உலிஸீஸ்

(கி. பா.)

உலிஸீஸ் என்பவன் ஒரு கிரேக்க சிற்றரசன். அவனைப் பற்றி அனேக ஆயிர வருஷங்களுக்கு முன்னிருந்த ஹோமர் என்னும் அந்தகக் கவி பல பாடல்கள் பாடினார். இவன் தன் தேசத்தைவிட்டு திக்விஜயம் செய்யச் சென்றதாகவும் அப்போது அவனுக்கு நேர்ந்த விசேஷ சம்பவங்களைப் பற்றியும் பாடியிருக்கிறார். கடைசியில் உலிஸீஸ் தன்னுடைய தேசத்திற்கு வந்துவிட்டான். ஆயினும் அவன் தேசத்தில் சும்மா இருக்கும் படி நிலைமைக்குட்பட்டவனல்லன். ருசிகண்டவனாதலால், இன்னும் வீரச் செயல்களைச் செய்யவேண்டுமென்றிருந்தானே யொழிய பெட்டியில் அடங்கிய பாம்புபோல இருக்கச் சம்மதிக்கவில்லை. 'பெற்றதே பாக்கியம்' என்று திருப்தியடையும் மதியிலிகளுக்கு இவனை உதாரணமாகக் காட்டவே ஆங்கிலக் கவியாகிய டெனிஸன் இவன் சொல்வதுபோல் ஒரு பாட்டெழுதியிருக்கிறார். அதன் கருத்தை இங்கே வெளியிடுகிறேன். புதிய பதங்களுக்குக் கடைசியில் குறிப்புக்களாக அர்த்தம் கூறுகிறேன்.

"என்னே என் பிழைப்பு! சோம்பேறியாய் இந்த மூலையில், இப்பாறைகளின் மத்தியில் கிழ மனைவியோடு என்னை யறியாத (1) காட்டுமிராண்டி கூட்டத்திற்கு நான் அரசனாகவிருந்து நியாயத்தை வட்டிப்பதில் என்ன லாபம்? இந்த ஜனங்கள் சேமிப்பதும் தூங்குவதுமே தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். நான் பிரயாணஞ் செய்யாமலிருக்க முடியாது. சமுத்திரப் பாதைகள் நீடூழி வாழ்க! நான் சதா தனிமையாகவோ என் மீது பிரியமுள்ள நண்பர்களுடனோ வெகுவாக ஆனந்த மனுபவித்திருக்கிறேன், அவஸ்தையும் பட்டிருக்கிறேன். தரையிலும், நதிகள் பெருக்குற்றபோதும், சமுத்திரத்திலும் சஞ்சரித்திருக்கிறேன். என் பெயர் உலகத்தில் பாவிவிட்டது. எதற்காக? சதா தணியாத பிரயாணப் பசியுடன் திரிவதற்காக. ஆ! நான் எவ்வளவு பார்த்திருக்கிறேன், அறிந்திருக்கிறேன்! மனிதருடைய பட்டணங்கள், நடவடிக்கைகள், மஹாநாடுகள், அரசாங்கங்கள், தேசங்களின் சீதோஷ்ண ஸ்திதிகள், என்னையும் நான் அறிந்திருக்கிறேன். சென்றவிடமெல்லாம் எனக்குச் சிறப்பே. சண்டையிலும் எனக் கொப்பானவரோடு கலந்து, டிராய் (2) பிரதேசத்தில் வெற்றிபெற்றிருக்கிறேன். நான் பார்த்தவைகளில் ஒரு

பாகமாகிவிட்டேன் நான். ஆயினும் என்? அனுபவம் என்பது இன்னும் நான் பார்வையிடாத உலகத்தை, நான் போய்க்கொண்டிருக்கும்போது தானும் பின்னால் போகும் மண்டலத்தைப் பார்க்க உதவும் ஒரு சாளரமன்றோ? ஆ! தயங்குவது முடித்துவிடுவது, துருப்பிடித்துப்போவது, உபயோகப் பட்டுப் பிரகாசிக்காமலிருப்பது எவ்வளவு உற்சாகமற்றது! மூச்சுவிடுவதும் வாழ்க்கையாகுமா? இவ்வுயிரைப்போல் இன்னொன்று கொடுத்தாலும் எனக்குப் போதாமலிருக்கும்போது, இந்த ஒரு வாழ்க்கையில் ஒரு சிறு பாகமே பாக்கியிருக்கிறது! ஆனால் பிரயாணத்தில் கழியும் ஒவ்வொரு மணி நேரமும் மரணத்தினின்றும் மீட்கப்பட்டது, புதிய விஷயங்களைக் கொணர்வது. சை! நான் இங்கு அடைத்துக்கொண்டிருப்பது உலகத்தின் மற்ற மூன்று பாகங்களுக்கே இழிவல்லவோ! இங்கு உண்டு உறங்குவது, என் வயது முதிர்ந்த ஆவி அதிகப்படியான ஞானம் வேண்டுமென்னும்போது என் போன்றவருக்கு சரியா? புத்திக் கப்புறம் உறையும் ஞானம், அஸ்தமிக்கும் நக்ஷத்திரம்போலிருக்கிறதே அதைப் பெறவல்லவோ என் ஆவி ஆசைகொண்டிருக்கிறது!"

இதோ என் புதல்வன் டெலிமாக்கஸ் இருக்கிறான். அவனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்துவிடுகிறேன். அவன் எனக்குப் பிரியமானவன், ராஜ காரியத்தை நன்குணர்ந்தவன், இந்த முரட்டுக் கூட்டத்தைப் படிப்படியாக நாகரிகமுள்ளவர்களாகச் செய்து சத் விஷயங்களைச் செய்யக் கற்றுக்கொடுப்பான். குற்றமற்றவன், பொதுக் காரியங்களைச் சிரத்தையுடன் செய்வான், மரியாதையை யுணர்ந்தவன், தெய்வபக்தி மிகுந்தவன். என் குல தெய்வங்களுக்குப் பூஜைகளை நான் சென்ற பிறகு செவ்வனே நடத்துவான். அவன் அவன் தொழிலைச் செய்கிறான், நான் என்னுடையதைச் செய்கிறேன்.

ஆ! அதோ இருக்கிறது துறைமுகம். மரக்கலம் பாய்மரங்களோடு தயாராய் நிற்கிறது! இருண்ட அகன்ற கடல்கள் அதோ கூப்பிடுகின்றன! என்னுடைய கப்பலோட்டிகாள்! என்னோடு சிரமப்பட்டும் உழைத்தும், சிந்தித்தும், இடியையும் பெருங் காற்றையும் வெய்யிலையும் சந்தோஷமாக பக்ஷபாத மின்றி எதிர்பார்த்தும், பயமற்ற ஹிருதயங்களையும் நெற்றியையும் காட்டிய என் கப்பலோட்டிகாள்!—நீங்களும் நானும் கிழவர்கள். இருப்பினும் என்! கிழவயதிற்கும் கீர்த்தியுண்டு வேலையுண்டு. மரணம் எல்லாவற்றையும் மூடிவிடுகிறது. ஆயினும் அம்முடிவிற்கு முன், எல்லோராலும் கொண்டாடப்படும் ஒரு வேலையை இன்னும் செய்து முடிக்கலாம். நாம் தேவதைகளோடு கலந்து சண்டை செய்தவர்களன்றோ! மலைகளினின்றும் விளக்குகள் மினுக்குகின்றன. பொழுதுபோய்விட்டது. சந்திரன் மெல்ல மேலே எழுகிறான். கடல் கொந்தளிப்பு அதிகரிக்கின்றது, வாருங்கள் தோழர்களே! இன்னொரு புதிய உலகத்தை நாடிச் செல்லக் காலம் தாமதமாய்

விடவில்லை. தள்ளுங்கள், அவர்களுடைய இடங்களில் கிரமமாக உட்கார்ந்து கொண்டு துடுப்புக்களால் அலைகளைத் தாக்குங்கள். ஏனெனில், நான் சாகு மளவும் சூரியாஸ்தமனத்தையும் மேற்கேயுள்ள நக்ஷத்திர மண்டலங்களையும் தாண்டிச் செல்லக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறேன். ஒருகால் சுழல்கள் நம்மை அடித்துத் தள்ளலாம். ஒருகால் ஆனந்தத் தீவுகளை (3) யடையலாம், அங்கே அகிலீஸை(4)ப் பார்க்கலாம். அனேகம் போய்விட்டபோதிலும் இன்னும் அனேகம் இருக்கிறது. முன் காலத்தில் பூமியையும் வானத்தையும் அசைத்த அவ்வளவு பலம் இப்போது நமக்கில்லாவிட்டாலும், இருக்கும் பலமும் மனோதிடமும் சளைக்கா—நாமெல்லோரும் வீரதீரம் பொருந்தியவர்கள், மூப்பினாலும் விதியினாலும் பலங் குறைந்தபோதிலும், மனோதிடத்தில் கெட்டியான சித்தமிருக்கிறது-சண்டை செய்ய, பின்னும் பின்னும் நாட, புதியனவற்றைக் காண, சிறிதும் இடங்கொடுத்துச் சளைக்காமலிருக்க."

*     *     *     *

அன்பர்களே! உலிஸீஸின் திடத்தைப் பாருங்கள். மூச்சுவிட்டுக் கொண்டிருப்பதும் ஒரு பிழைப்பா என்கிறான். அந்தோ! நமது தேசத்தில் ஏற்படும் இன்னல்கள் இம்மாதிரி திடமின்மையாலன்றோ! போதும்! போதும்! என்று சொல்லி மேலெழவொட்டாமல், பலம் குன்றி, ஊக்கம் குன்றி, சிறு குழந்தைபோல் மற்ற தேசத்தவரிடம் ஒவ்வொன்றையும் எதிர்பார்த்து வருகின்றோமே. எனக்குத் தெரிந்த ஆங்கில உபாத்தியாயர் அறுபது வயது வரையில் உழைத்துவிட்டு வேலையிலிருந்து விலகினார். பிறகு சும்மா சாய்ப்பு நாற்காலியில் படுத்து உறங்கினாரா? இல்லை! இல்லை!! 'இத்தாலியன்' என்னும் பாஷையைப் படிக்க ஆரம்பித்து தேர்ச்சிபெற்று வருகிறார். இனிமேல் பட்டம் வாங்கப்போகிறாரா, அல்லது படிப்பு கற்றுக் கொடுக்கப்போகிறாரா? இல்லை. இருந்தாலும் மூளைக்கு வேலை கொடுத்தாலே இறைத்த கிணற்றைப்போல் சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் இருக்குமென்பது அவருடைய கொண்டாடத்தக்க கருத்து. நமது பாரத வர்ஷத்திலும் இருக்கும் வயோதிகரும், வயதில் இளையராயிருந்தும் வயோதிக சொரூபத்தை யடைந்தவரும் உலிஸீஸைப்போல் மூச்சுவிட்டுக்கொண்டிருக்கும் வாழ்க்கையை விட்டு மற்ற தேசங்களைப் பார்க்கப்போகாவிட்டாலும் உள்நாட்டிலேயே ஏதேனும் ஒரு சாதகமான தொழிலைக் கூலியை எதிர்பார்க்காமல் செய்வார்களாயின் எவ்வளவு சீக்கிரத்தில் நமக்கு நன்மையுண்டாகும்? இதைப் படிக்கும் அன்பர்கள் மன்னிப்பார்களாக. ஆயினும் நமது தேசத்தில் அதுவும் தென் தேசத்தில் எத்தனை பேர் சாப்பிட்டுவிட்டு திண்ணையில் சாய்ந்த வண்ணமாய் பெரிய புத்தகங்களைப் படித்து அக்கரை கண்டுவிட்டதுபோல் தம்மைப் பாராட்டிக் கொண்டு காலங் கழிக்கின்றனர்? இவர்கள் சிறிது ஊக்கங்கொண்டு மற்றோருக்கு சரீர சகாயஞ் சிறிது செய்தால் நமக்குள் எவ்வளவு ஒற்றுமை யுண்டாகும் சந்துஷ்டியுண்டாகும்? மேனாட்டார் மேம்பாடடைந்ததற்குக் காரணம் பின்னும் பின்னும் ஆராய்ச்சிக்கு மேல் ஆராய்ச்சி செய்வது தான். போதாது போதாது இன்னும் வேண்டும், வேண்டும் என்றல்லவோ அவர்கள் அலைந்து உழைக்கிறார்கள்? ரசாயனத்திலும் ராஜீயத்திலும் சமூகத்திலும் இவ்வளவு மேம்பாடடைந்திருப்பதற்குக் காரணம் இந்தப் போதாதென்ற மனமே. நமது தேசத்தில் போதுமென்னும் மனமே, இரும்புச் சங்கிலியாய் நம்மைத் தரையில் அழுத்திவிட்டது. போதும் இந்தப் போது

மென்ற மனம். இனிமேலாவது நாம் மற்றவர்களைப் பார்த்து சிறிது கற்றுக் கொள்வோம். நமது மூதாதைகள், நமது ரிஷீஸ்வரர்கள் பெரிய மஹான் களாயிருக்கலாம், அவர்கள் அரிய விஷயங்களை வெளியிட்டிருக்கலாம், ஞான திருஷ்டியினுல் கண்டிருக்கலாம். ஆயினும் இப்போதென்னவாயிற்று? நாம் இப்போது முயற்சிசெய்து முன்னுக்கு வரவேண்டுமே யொழிய, என் தேசம் அப்படியிருந்தது, அவன் இப்படி, இவன் இப்படி என்று சொல்வதில் கொஞ் சமும் பிரயோஜனமில்லை.

(1) உலிஸீஸ் சதா திரிந்துகொண்டிருந்ததால் அவனுடைய குடிகள் அவன் இருப்பதாகவே நினைக்கவில்லை. அரசனின்றி ராஜ்யம் நடந்துகொண் டிருந்ததால் அவன் வந்த பின்னும் குடிகள் அவனை யறியவில்லை.

(2) டிராய் என்னும் நகரத்தாருக்கும் கிரேக்கருக்கும் யுத்தம் நடந்ததாக ஹோமர் ஒரு கவி பாடியிருக்கிறுர். கிரேக்க அரசனுகிய 'மினிலாஸ்' என் பவனுடைய அழகிய மனைவியாகிய 'ஹெலன்' என்பவளை, டிராய் ராஜகுமார ஞன 'பாரிஸ்' என்பவன் கவர்ந்து செல்லவே, இருதிறத்தாருக்கும் யுத்தம் நடந்தது. கிரேக்கரே வெற்றிபெற்றுர்கள். (சில ஆங்கில நூலாசிரியர்கள். இக்கதையைப் பார்த்துத்தான் இந்தியர்கள் இராமாயண மெழுதிவிட்டார்கள் என்று அபிப்பிராயப்படுகிறுர்கள்!)

(3) இறந்தவர்கள் இத்தீவுகளில் வசிப்பார்கள் என்பது கிரேக்கருடைய அபிப்பிராயமாயிருந்தது.

(4) அகிலீஸ் ஒரு பெரிய கிரேக்க வீரன்.

# இலக்கணப் பயிற்சி

(டர்பன், சரஸ்வதி சபைத்தலைவர்
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை அவர்கள்.)

தற்காலத்திய மாணவர்கள் ஆங்கிலத்திலும், தமிழிலு மெழுதும் போது ஏற்படும் பிழைகளுக்குக் காரணம் அவர்களுக்கு இலக்கணத்திற் பயிற்சி குறைவெனப் பலர் அபிப்பிராயப்படுகின்றனர். இது ஒரு விதத்திலாமோதிக்கத் தக்கதே. ஏனெனில், சூத்திர விதிகளின் பொது அறிவிருந்தால், பிழைகளுண்டாவதற் கவ்வளவு இடமிராது. ஆயினும், இச் சூத்திர விதிகள் பாஷா நடையின் கம்பீரத்தையும், மனோபாவப்படி வனப்பு வாய்ந்ததாய் எழுதுஞ் சக்தியையும் சற்று மழுங்கச் செய்கின்றன வென்றே சொல்லவேண்டியிருக்கிறது. சாதாரணமாய், அதிக நெருக்கடியான விதிகளுக்குட்படாத ஒருவனது எண்ணத்தின் போக்கிற்கும், தானெழுது மொவ்வொரு வார்த்தையிலும் சந்தேகப்பட்டெழுது மொருவனது சித்தத்தின் கதிக்கும் சாலவும் வித்தியாசமுண்டு. நிர்ப்பந்தமற்ற ஒரு வியாசக்காரனது விஷயத்தின் தன்மையும் நடையும், அதிக சூத்திர விதிகளைக் கடைப்பிடித்தெழுதுபவனது வியாசத்தை விடத் தீர்மானமாய், விசேடமாயிருக்குமென்றே சொல்லலாம். இதற்குதாரணமாய், ஆங்கில பாஷா கிரந்த அபிவிருத்தியின் சரித்திரத்தை நோக்கின், "கிளாஸிகல்" வகுப்பாரைவிட "ரோமேன்டிக்" வகுப்பாரது விஷய தானங்கள் மிகவும் கொண்டாடப்பட்டிருக்கின்றன. கூடியவரையில் பொது ஜன அறிவு கொளுத்துவதை நோக்கமாய்க் கொண்டு அதிக விதிகளால் சிரமப்படுத்தப்படாது அன்னோரது பாடல்களும் வசன நூல்களும் எழுதப்பட்டிருப்பதால், சடுதியில் வாசிப்போரது சித்தத்திற்கு எளிதில் புலப்படுகின்றது. முக்கியமாய், மனிதனது சித்தமும் மனதும் உலகத்திற்றோன்றியது முதல் வாலிபப் பருவமடையும் வரையில் தனது சுற்றத்தாராலும், பழக்க வழக்கங்களினாலும், தன்னைச் சுற்றிலுமுள்ள வஸ்துக்களினாலும் மாற்றப்பட்டாலொழிய அவைகள் மாறக்கூடியவையல்ல. அக்காலங்களில் மனதானது சுயேச்சையாய் பற்பல ரகசியங்களை கிரகிக்கத்தக்கது. இத்தருணத்தில், மாணவர்கட்கு அவரவர்களது சுயேச்சையான மனோபாவத்திற்குத் தக்க விஷயங்களை அம்மாதிரி நோக்கத்துடனுள்ள புத்தகாசிரியர்களெழுதுவார்களாகில், அது பசுமரத்தாணிபோல் அன்னவரது இளமை மனதிற் படிந்து அவர்களது குணாதிசயங்களை அதற்குத் தக்கபடி வளர்க்கக்கூடும். அஃதில்லாமல், பாஷை ஆரம்பித்தவுடனே

னேயே, ஒரு மாணவனுக்கு எண்ணுயிரம் சூத்திர விதிகளைப் போதித்து அதன்படி அவனுக்கு எழுதும் சக்திவந்தாலொழிய அன்னேன் பாஷையிற் சரியாகப் பயிலவில்லையென வைத்தால், அது குழந்தை யொன்று நடை பழக ஆரம்பிக்கும்போதே அதன் வழியில் முள், கல்விவைகளைப் போட்டு அதனு லேற்படும் இடையூறுகளை அதுவே தவிர்த்து செல்லவல்லதாவெனப் பரீட்சை பார்ப்பதுபோலாகின்றது. சுபாவமாகவே, "இலக்கியங்கண்டதற் கிலக்கணமியம்ப" லென்பது யாவரும் நன்குணர்ந்தது. இது தெரிந்திருக்கும் அநேகர் கூட, பாஷாக்ஞான மேற்படாததின் குற்றம் சூத்திர விதியின் அறிவில்லாமையே யெனச் சொல்லுகிருர்கள்.

கல்வி இலாகா அதிகாரிகளும், பரீட்சை காகிதங்களில் வர வர இலக்கண சம்பந்தமான விஞக்கள் அதிகமாய்க் கேட்டுவருகின்றனர். இப்படிக் கேள்விகள் அதிகப்படுவதினின்றும், இலக்கணப் பயிற்சியில் முன்னிருந்ததைவிட மாணவர்கட்கு அதிக ஊக்க மேற்பட்டதாயுந் தோன்றவில்லை. பாஷையின் பெருமையும், அதன் நடையின் விசேஷத்தையும், மாணவர்கள் புத்தகங்கள் நாளுக்கு நாள் அதிகம் வாசிப்பதினின்று உணர்வதியற்கையாமே தவிர, பாஷா ஆரம்ப காலத்து சூத்திர விதிகளைக் கொண்டு அவர்களைச் சுமத்துவது பயிற்சியை திட்டமானதாகச் செய்யாதெனத் தோற்றுகின்றது.

இ




# மணி நீர்ப் பொய்கை.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

மலர் நிறைந்த பொய்கையும் மீன் நிறைந்த வானமும் என்ஞான்றும் கவிஞர் மனத்தைக் கவரும் இயற்கை யழகு வாய்ந்தனவாம். காலையில் தோன்றும் கதிரவன் ஒளியால் களித்து விரியும் கமல மலரைக் கண்ட கவிஞர் உள்ளமும் கனிந்து மலர்வதாகும். இவ்வாறு இயற்கையழகினை மாந்திக் களித்த கவிஞர் மொழிகளை ஈண்டு ஆராய்வோம். ஒருநாள் காலைப் பொழுதில் நீலத்திரை விரித்த வானத்தே கதிரவன் ஒளி வீசி எழுந்தான். கண்களைக் கவரும் அழகு வாய்ந்த கமல மலர்களில் கள்ளுண்டு களிக்கப் போந்த கார் வண்டு பொய்கையின் மருங்கே சுற்றிச் சுழன்று இன்னிசை முரன்றது. கதிரவன் ஒளியால் கண்போல் மலர்ந்த பொய்கையின் நடுவே இதழ்விரிந்திலங்கிய கமல மலரில் ஓர் வெள்ளை அன்னம் இனி தமர்ந்திருந்தது. காலைப் பொழுதில் வீசிய இளங்காற்றின் இனிமையை நுகர்ந்த அவ்வன்னம் நறுமலர்ப் பள்ளியில் நன்கமைந்து தெள்ளிய திரைகள் தாலாட்ட இனிது துயின்றது. இவ்வாறு மெல்லிய சேக்கையில் துயின்ற அன்னத்தின் அழகினை,

“தாய் தன் கையின் மெல்லத் தண்ணென் குறங்கினெறிய
வாய் பொன் அமளித்துஞ்சும் மணியார் குழவி போல
தோயும் திரைகள் அலைப்பத் தோடார் கமலப்பள்ளி
மேய வகையில் துஞ்சும் வெள்ளையன்னம் காண்மின்”

என்று சிந்தாமணி ஆசிரியர் செஞ்சொற்களாற் கூறி மகிழ்ந்தார். அன்பார்ந்த குழவியை அழகிய மஞ்சத்திலமைத்து அதன் துடையைத் தூயகைகளால் தடவித் துயில்விக்கும் அன்னைபோல், ஈரம் வாய்ந்த பொய்கை அன்னத்தை அலைகளால் துயில்வித்ததென்று கவி அமைத்துள்ள உவமை சால அழகியதாகும். தண்மை வாய்ந்த பொய்கை தலையாய அன்பு வாய்ந்த அன்னையை ஒத்தது. நற்றாமரைக்கயத்தில் நீங்காதுறைந்த நல்லன்னம் தாயினின்றும் பிரியாத சேயை ஒத்தது. இளங்காற்றின் இயக்கத்தால் எழுந்த இனிய திரைகள்

அன்பினுல் இயங்கும் அன்னையின் மெல்லிய கரங்களை ஒத்தன. அத்திரைகள் தோய்தலால் அன்னம் அடைந்த இன்பம் அன்னையின் கைதோய்தலால் அருங் குழவி அடையும் இன்பம் போன்றது. இங்ஙனம் அன்னம் துயிலுதற் கமைந்த நறுமணங் கமழும் நன்மலர்ச் சேக்கை மெல்லிய வெண்பட்டு விரித்த விழுமிய மஞ்சம் போன்றது என்று கவிஞர் எழுதி அமைத்த ஓவியம் கற்போர் மனத்தைக் கவர்வதாகும். மெல்லியல் வாய்ந்த மதலை இனிது துயிலும் வண்ணம் பொன்னுலாய அமளியில், நறு மணம் கமழும் பட்டாடை விரிக்கும் அன்னையே போல், அன்னத்தின் மென்மையை அறிந்த பொய்கை செம்மை வாய்ந்த மலரில் மெல்லிய இதழ்களை அடுக்கடுக்காய் விரித்து மகரந்தம் தூவி ஓர் அழகிய சேக்கை அமைத்தது. மெல்லிய சேக்கையில் மைந்தனை அமைத்த பின்னரும் அருகே அமர்ந்து அன்போடு தட்டித் துயில்விக்கும் அன்னைபோல் அடுக்கடுக்காய் எழுந்து தாமரைப்பள்ளியைத் தட்டியசைத்துச் சென்ற தெள்ளிய திரைகளால் பொய்கை அவ்வன்னத்தைத் துயில்வித்தது. இவ்வாறு,

> "மாசறத் தெளிந்த மணி நீர் இலஞ்சிப்
> பாசடைப் பரப்பிற் பன்மலரிடை நின்று
> ஒருதனி ஓங்கிய விரைமலர்த் தாமரை
> அரச அன்னம் ஆங்கினி திருந்த"

அழகிய காட்சியை அருந்தமிழ்க் கவிஞர் ஓர் சிறந்த ஓவியமாக எழுதிப் போந்தார்.

இத்தகைய பொய்கையில் நீலத்துகிலுடுத்த ஓர் மங்கை நீராடச் சென்றாள். அப்பூம்பட்டாடையில் குயிற்றிய செம்மைசான்ற மணிகளில் கதிரவன் ஒளி வீசியபொழுது அம்மணிகளின் சுடர்கள் பொய்கையின் நீர்ப்பரப்பில் விழுந்து நெருங்கிப் பூத்த செந்தாமரையை நிகர்த்தன. அச்செஞ்சுடர்களைச் சேய்மையிற் கண்ட ஓர் மட அன்னம் அவற்றைச் செந்தாமரைப்பூவென்று மயங்கி விரைந்தோடிச் சென்று ஆர்வத்தாற் கவ்விற்று. வண்ண மணிகளின் நிழலாய சுடர்கள் வாயிலகப்படாமை கண்டு தன் மடமையை நினைந்து நாணிய அன்னம் வந்த வழியே விரைந்து சென்றது. இத்தகைய இனிய இயற்கைக் காட்சியை

> "நீலத் துகிலிற் கிடந்த நிழலார் தழலம் மணிகள்
> கோலச் சுடர் விட்டுமிழக் குமரி அன்னம் குறுகி
> சால நெருங்கிப் பூத்த தடந்தாமரைப் பூவென்ன
> வாலிச் சுடர்கள் கௌவி அழுங்கும் வண்ணம் காண்மின்"

என்று கவிஞர் நயம்பட எழுதிப் போந்தார். நீலத்துகிலின் இடையே இலங்கிய செம்மணி, நீலநிறம் வாய்ந்த இலைகளின் நடுவே விளங்கிய செம்மலர்போல் திகழ்ந்தது. ஒளியிற் சிறந்த அம்மணிகளின் மீது காலைக்

கதிர்கள் வீசியபோது அம்மணியின் நிழல்கள் அருகே விழுதல் இயல்பே யாகும். நீராடப்போந்த மங்கையின் நீல வுடையில் மணிகள் நெருக்கமாகப் பதிந்திருந்தமையால் அவற்றின் நிழல்கள் நெருங்கி விழுந்து சால நெருங்கிப் பூத்த செந்தாமரையை நிகர்த்தனவென்று கூறுவது இயற்கைக்கு மிகப் பொருத்தமுடையதாகும். நாள்தோறும் நற்றாமரைக் குளத்தில் வாழ்ந்து செங் கமல மலர்களைச் செவ்வையாய் அறிந்திருந்த அன்னமே, செம்மணியின் சுடர் களைச் செந்தாமரை என்று மயங்கிற்றென்றால் அம்மணிகளின் செம்மைசான்ற ஒளி சொல்லாமலே விளங்குமன்றோ? அச்சுடர்களைத் தாமரை என்று கருதி அன்னம் விரைந்து சென்று கவ்விய ஆர்வமும், அச்சுடர்கள் வாயிலகப்படா மையால் அழுங்கும் தோற்றமும் நகைக்சுவை பயப்பனவாகும். ஆகவே மங்கை புனைந்திருந்த மணியாடையின் சிறப்பையும், அம்மணிகள் கதிரவன் ஒளியால் சுடர் உமிழ்ந்த செம்மையையும், நீல நிறத்தினடுவே அமைந்த செஞ் சுடர்கள் தாமரை இலைகளின் நடுவே இலங்கும் மலர்போலிருந்த மாண்பையும் சிந்தாமணிக் கவிஞர் செவ்வையாக உணர்த்திப் போந்தார்.

இவ்வாறு நன் நீர்ப் பொய்கையில் இறங்கிப் புனலாடிய மங்கை அப் பொய்கையின் அழகையும், நீரின் தன்மையையும், இளங்காற்றின் இனிமை யையும் நுகர்ந்து நெடுநேரம் கரையேறாது களித்து நீராடுவாளாயினள். பொய்கையின் சுகத்தை அறிந்த மங்கை பசியையும் மறந்தாள். தன்னோடு பொய்கைவரையும் போந்து கரையில் காத்திருந்த கிளியையும் மறந்தாள். இவ்வாறு தன்னை மறந்து தாமரைத் தடத்தில் இன்புற்று விளையாடக்கண்ட இளங்கிள்ளை நெடுநேரம் பொறுத்திருந்து பசியின் கொடுமையால் மங்கையைக் கரையேற்றுதற்கு ஓர் சூழ்ச்சி செய்தது. தன்னைக்காதலித்து வளர்த்த தலை வியை நோக்கி "பாம்பு, பாம்பு" என்று பதறிக் குளறிக் கூறிற்று. பாம்பு என்ற சொற்கேட்ட மங்கை மனம் பதைத்துக் காதில் அணிந்த தோடு கழல விரைந்தோடிக் கரை சேர்ந்தாள் என்று கவி கூறும் நயம் சாலச் சிறந்த தாகும்.

"தீம்பாற் பசியினிருந்த செவ்வாய்ச் சிறு பைங்கிளிதன்
ஓம்புதாய் நீர்குடைய ஒழிக்கும் வண்ணநாடிப்
பாம்பாவென்ன வெருவிப் பைம்பொற்றோடு கழலக்
காம் பேர் தோளி நடுங்கிக் கரை சேர்பவளைக் காண்மின்"

என்பது சிந்தாமணியாகும். பாலூட்டி வளர்த்த பசுங்கிளியின் பசியையும் மறந்து தலைவி நீராடத் தலைப்பட்டாள் என்றமையால் மனத்தை முற்றிலும் கவரும் மாண்பமைந்த பொய்கையின் பெருமை இனிது விளங்குவதாகும். அத் தலைவிபால் நினைந்தூட்டும் தாயாதலால், மதி நலம் வாய்ந்த கிளி அவள் மனத் தைத் துன்புறுத்தாது தன் பசி ஒழிக்க ஓர் வழியை நாடிற்று. மலர் நிறைந்த பொய்கையில் மீன் முதலாய உயிர்களும், அன்னமுதலிய பறவைகளும், நிறைந்திருப்பினும் மங்கைக்கு பாம்பினிடத்துள்ள பயம் மிகப் பெரிதென்

றெண்ணிய கிளியின் மதி நலம் மிக்க மாண்புடையதாகும். இவ்வாறு இடம் தெரிந்து பேசுதற்குரிய முறையில் பைங்கிளியைப் பயிற்றிய மங்கையின் மதி நலமும் அக் கிளி மொழிகளில் விளங்குகின்றது. ஆகவே புனித நீர் நிறைந்த பொய்கையின் பெருமையும், அந்நீரில் மகிழ்ந்து விளையாடிய மங்கையின் அருளும் அம்மங்கையைப் பிரியாது வந்த கிளியின் மதி நலமும், சிந்தாமணிக்கவிஞரால் சிறப்பாக உணர்த்தப்பட்டன.

இவ்வாறு கரையேறிய மங்கை நனைந்த துகிலோடு தன் மனையை நோக்கி நடந்து சென்றாள். நனைந்த பட்டாடை உடலிற் படிந்த தன்மையால் தன் மேனியின் நிறம் வெளியே தோன்றக் கண்ட மங்கை நாணத்தால் தலை கவிழ்ந்து ஒல்கி ஒதுங்கி நடந்து சென்றாள். அப்பொழுது அம்மங்கையினிடையில் அமைந்த மணிமேகலை தலைவிக்கு நேர்ந்த மானத்தைத் தனக்கு நேர்ந்ததாகக் கருதி தன் மணி ஒலியை அடக்கி இடையைத் தழுவிக்கிடந்ததென்று கவிஞர் கூறும் மொழிகள் இயற்கை நலம் வாய்ந்தனவாம். மங்கையாது மேனியின் நலத்தையும் நிறத்தையும் மறைக்கும் தன்மைவாய்ந்த பூந்துகில், நீரில் நனைந்தபோது உடலிற் படிந்து ஒட்டிக்கொள்வது இயல்பாகும். மணிச் சதங்கையார்ப்ப மங்கையர் இடையில் விளங்கும் மணிமேகலை நீரில் நனைந்தமையாலும் நனைந்த ஆடையின் மீது கிடந்தமையாலும் ஒலியாத தன்மையை மானத்தால் மௌனமாயிருந்ததாகக் கருதுதல் கவிநயமாகும்.

> "நான நீரிற் கலந்து நலங்கொள் பூம்பட் டொளிப்ப
> மேனி தோன்ற விளங்கி வெளிப்பட் டதற்கு நாணி
> மான மகளிர் போல மணிமேகலைகள் பேசாது
> ஆனந்தழுவிக் கிடப்பச் செல்வோள் தன்மை காண்மின்".

என்று சிந்தாமணி ஆசிரியர் அருளிய செஞ்சொற்கவி சிறந்த இன்பம் பயப்பதாகும். இவ்வாறு இயற்கைக் காட்சிகளை இழுமென் மொழிகளால் எழுதியமைக்கும் விழுமிய முறை வாலறிவமைந்த மேலோர் துறையாகும்.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.




# சசிவன்னன்.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

(119-ம் பக்கத் தொடர்ச்சி)

## மனம் புத்திகள் நீ யன்று.

சசி:—எம்பெருமானே! தாங்கள் கூறியவற்றால் பிராணன் நானல்லவென்றறிந்தேன். அது பொருந்தும். ஆனால் மனம் புத்தி என்னு மிரண்டி லொன்றோ அல்லது இரண்டுமோ எனது வடிவமாதல் வேண்டும் என்றெண்ணுகின்றேன்.

மாநந்தி:—அன்புள்ள மாணவக! நீ கூறியது சரியன்று. மனம் நீ யன்று. ஏனெனில், மனமானது, 'அந்தக்கரணங்கள் நான்கனுள் ஒன்று' என்று எண்ணப்படுகின்றது. அதனாலும், 'எனது மன மறிய' என்று சொல்லுகிறபோது, 'எனது' என்னும் விவகாரத்திற் கிடமா யிருப்பதாலும் அதாவது மமதைக்கு விஷயமா யிருத்தலாலும், மனம் நீ யன்று. அன்றியும் மனமானது அன்னத்தின் காரியம் என்று முன்னம் சொன்னே னல்லவா? (உன்னால் உண்ணப்படும் அன்னமானது உள்ளே சென்று அங்குள்ள சாடராக்கினியால் தூலம் மத்திமம் சூக்குமம் என்று மூன்று பாகமாகப் பிரிகிறது. அவற்றுள் தூலப் பகுதியாக ஒருபாகம் மலமாய்விடுகின்றது. மத்திமமாகிய ஒருபாகம் உடம்பிற் குறுதி யுண்டாக்குவதற்காக அதனோடு சேர்ந்து ஒன்று பட்டு உடம்பாகின்றது. மற்றொன்றாகிய சூட்சும பாகம் மன மாகின்றது.) அன்னத்தின் காரியமாகிய மலம் நீயல்லாம லிருப்பதுபோல மனமும் நீ யாக மாட்டா யல்லவா? ஆகையால் மனமும் நீ யன்று. புத்தியும் இத்தன்மையினதே யாகலின் அதுவும் நீ யன்றாம்.

சசி:—அன்றேல், அகங்காரம் நானோ?

## அகங்காரம் நீ யன்று.

மாநந்தி:—அகங்காரமும் நீ யல்ல. ஏனெனில், அகங்காரமும் அந்தக் கரணம் நான்கனுள் ஒன்றாகவைத் தெண்ணப்படுகின்றது. அன்றியும், இவ்வகங்காரந்தான் இன்ப துன்பங்களுடையதா யிருப்பது. அகங்காரமுள்ள காலங்களாகிய சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் இன்ப துன்பங்க ளிருப்பதும், அவ்வகங்கார மில்லாத சுழுத்தியில் இன்ப துன்பங்க ளில்லாமலிருப்பதும் அனுபவமா யறிந்த விஷயமல்லவா? சாக்கிர சொப்பனங்களி லிருப்ப

தும் சுழுத்தியில் இல்லாம லிருப்பதுமாகிய பிறழ்ச்சி யுடையதாயு மிருக்கின்றது. இத்தியாதி காரணங்களால் அகங்காரமும் நீ யன்று. தவிர, இவ் வகங்காரமே பிறவிக்குக் காரணமா மென்று பெரியோர் பேசுவர். இதனுலும் அகங்காரம் ஆன்மா வன்றென்பது அறியக் கிடக்கின்றதே. மேலும், அகங்காரம் அறிவற்ற சடப்பொருளன்றே!

**சித்தம் நீ யன்று.**

சசி:—சித்தமே ஆன்மாபோலும்?

மாநந்தி:—அதுவுமன்று. சந்தேகத்திற் கிடமாகிய பொருளையும் (சந்தேகித்தல் மனத்தின் தொழில்), இன்ன பொருள்தானென்று நிச்சயமா யறிதற் கிடமாகிய வோர் பொருளையும் (நிச்சயித்தல் புத்தியின் தொழில்), நான் எனது என்று அபிமானித்தற் கிடமாகிய வோர் பொருளையும் (நான் எனதென்று அபிமானித்தல் அகங்காரத்தின் தொழில்), சிந்திப்பது சித்தமாம். ஆகவே சித்தமானது சிந்திப்பதற்குரிய ஓர் கருவியே யாகுமன்றி ஆன்மா வன்று என அறிந்துகொள்ளக் கடவாய்.

உடம்பு முதல் சித்தம் வரையில் சொல்லப்பட்ட (தூலதேகம், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய) அனைத்தும் உன்னுல் அறியப்படும் பொருள்கள். ஆகலின் அவை நீ யல்ல; உன்னுடையனவு மல்ல.

**அறியும் பொருளே நீ.**

சசி:—ஞானதேசிகா! என்னு லறியப்படும் பொருள்களெல்லாம் நானல்லவெனக் கூறினீர்கள். இதை விளக்கத் தாங்கள் காட்டிய காரணங்களால் அது சரி யென்றே எனக்குந் தெரிகின்றது. ஆனுல் நான் எனப்படும் பொருள் ஒன்று இருந்தே தீரவேண்டுமே. என்னுல் அறியப்படும் பொருள் யானல்லவாயின், என்னு லறியப்படாத பொருளோ யான் எனத்தகும் பொருள்?

மாநந்தி:—அறியப்படாத பொருளும் நீ யன்று. ஏனெனில், அறியப்படாத பொருள் உலகத்திற்குக் காரணமான மாயையாகும். அறியப்படும் பொருள் அதன் காரியமான தேகாதிப் பிரபஞ்சமாம். ஆகையால் அவை யிரண்டும் நீ யல்ல என்று உபநிஷத்துக்கள் பறை யறைந்துகொண் டிருக்கின்றனவே.

சசி:—சுவாமி! தாங்கள் கூறுவது மிகவும் விந்தையா யிருக்கின்றது. அறியப்படும் பொருளும் நானல்ல வென்கின்றீர். அறியப்படாப் பொருளும் நானல்ல வென்கின்றீர். அப்படியானுல் நான் யார்?

மாநந்தி:—மாணவக! நீ அறியப்படும் பொருள், அறியப்படாப் பொருள் என்னும் இரண்டிற்கும் வேறாகவுள்ள அறிவே நீயாகிய ஆன்மப் பொருள். அவ்வான்ம வஸ்துவானது இந்திரியங்களா லறியப்படும் பொருளன்று. அன்னியப் பிரகாசத்தை விரும்பாமல் சொப்பிரகாசமாக விளங்கும் ஆன்மாவானது, பரிசிக்கத் தக்க பொருளன்று. உருவுடைப் பொருளன்று, சப்த வடிவப் பொருளன்று, கந்தமுடைய பொருளன்று, சுவையுடைய பொருளன்று. ஆகவே, பரிசம், உருவம், சப்தம், கந்தம், சுவை என்பவற்றை யறியும் மெய், கண், காது, மூக்கு, வாய் என்று சொல்லப்படும் ஞானேந்திரியங்களா லறியப்படும் பொருளன்று.

### தன்னைக் காணும் தன்மை சாற்றல்

சசி:—ஆனல் அதனை எப்படி யறிவது?

மாநந்தி:—அறிபடும் பொருள் நீ யல்லை, அறிபடாப் பொருள் நீ யல்லை,
அறிபொரு ளாகுமுன்னை அனுபவித்தறிவாய் நீயே.
—(கைவல்யம்.)

ஞானக்கண்ணல் அபரோக்ஷமாய் அதன் வடிவாகவே யிருந்து அறிதல்வேண்டும். வேதத்தின் பரம தாத்பரிய மிதுவேயாகும். இதைத்தவிர வேருகச் சொல்லப்பட்ட கர்மம் உபாசனைகளெல்லாம் இப் பரம தாத்பரியத்தை யுணர்ந்து கொள்ளுதற்குரிய சாதனமே யன்றி பரம தாத்பரியமன்று. ஒன்றேனும் பேதமில்லாத அபேத ஞானர்த்தத்தைத் தரப்பட்ட சாமவேதத்திற்கு ஆபரணம்போன்ற சுத்தார்த்தமான தத்துவமசி என்னும் வாக்கியத்தின் அர்த்தமுமாகும்.

### மகா வர்க்கியங்கள்

இருக் வேதம்: "பிரஞ்ஞானம் பிரஹ்மம்," என்றும்,
எசுர் வேதம்: "அகம் பிரஹ்மாஸ்மி," என்றும்,
சாம வேதம்: "தத்துவமஸி," என்றும்
அதர்வண வேதம்: "அயமாத்மா பிரஹ்மம்" என்றும் கூறுகின்றன.

இவற்றுள், "தத்துவமசி" மகாவாக்கியம் சாமவேதத்தில் உத்தாலக முனிவர் தன் மைந்தனுகிய சுவேதகேதுவுக்கு உபதேசித்த உபதேச மகாவாக்கியமாகும். "தத்துவமசி" என்பதற்கு "அது நீயா யிருக்கின்ருய்" என்பது பொருளாகும். ஆகவே, சசிவன்ன! நீ அறியப்படும் பொருளுமல்ல; அறியப் படாப் பொருளும் நீயல்ல; அறிவே நீ. உன்னைப் பிறிதொன்ருல் அதாவது கண் முதலிய ஞானேந்திரியங்களால் அறிதல் இயலாது. உன்னை உன்னுல் தான் அறியலாம். அதாவது அகண்டாகார விருத்தியாகிய அபரோக்ஷானுபவத்தால்தான் அறிதல் வேண்டும்.

### தத்துவமசியின் அர்த்தங் கூறல்.

சசி:—தாங்கள் கூறிய தத்துவமசி என்னும் சாமவேத மாவாக்கியத்தின் பொருளை விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

மாநந்தி:—'தத்துவமசி' என்னும் வாக்கியமானது 'தத்-துவம்-அசி' என்னும் மூன்று பதங்களையுடைய வாக்கியமாகும். இவற்றுள் 'தத்' என்னும் சொல்லின் பொருள் நிர்மலமான பிரஹ்மமாம் (ஈசனும்). 'துவம்' என்பதன் பொருள் சீவன். 'அசி' என்பதன் பொருள் நிர்மலமாகிய இவ்விரண்டு பொருள்களின் ஐக்கியமாம்.

### உபாதி பேதத்தினுண்மை யுணர்த்தல்

சசி:—குருபர! தாங்கள் வேதவாக்கியமெனக் கூறிய தத்துவமசி வாக்கியத்திற்குச் சொன்ன பொருள் மிகவும் பொருத்தமில்லாததாகும். ஈசனுக்கும் சீவனுக்கும் ஐக்கியம் பொருந்தவே பொருந்தாது. ஏனெனில் ஈசுவரன் பேரறிவினன்; சீவன் சிற்றறிவினன். ஈசுவரன் சுதந்திரன் மாயாரகிதன்; சீவன் பரதந்திரன் மாயாசகிதன். ஈசுவரன் நித்தியமுத்தன்; சீவன் பந்த

முடையவன். இவ்வாறு பலவகையில் ஈசுவரனுக்கும் சீவனுக்கும் நேர் விரோதமான பேதங்களிருக்க ஐக்கியம் எவ்வாறு பொருந்தும்? இது ஒளியும் இருளும் ஐக்கியமானவை என்பது போலல்லவோ விருக்கிறது!

மாநந்தி:—சீடனே! ஈசுவரனுக்கும் சீவனுக்கும் உபாதியால் பேதமேயன்றி உருவத்தாலன்று. ஈசுவரனும் உபாதியுடையவன் சீவனும் உபாதியுடையவன். ஆனால் ஈசுவரனுடைய உபாதி வேறு; சீவனுடைய உபாதி வேறு. ஒரு பொருள் தன்னுடைய தன்மையை வேறோர் பொருளினிடத்திருப்பதாகத் தோற்றுவிப்பது உபாதியெனப்படும். சிவந்த நிறமுள்ள ஓர் மலரானது தனக்கண்டையிலுள்ள பளிங்கு முதலியவற்றினிடத்து அந்த நிறத்தைக் காட்டுகின்றது. அதைப் பார்ப்பவர்கள் பளிங்கு சிவப்பாயிருக்கின்றது என்றியம்புமாறிருக்கச் செய்கின்றதல்லவா? அதுதான் உபாதி.

சீவனுக்கு உடல் முதலிய உபாதிகளிருக்கின்றன. அப்படியே ஈசுவரனுக்கும் காரணத்தன்மை முதலிய உபாதிகளுண்டு. எனவே ஈசுவரவுபாதியைக் காரணோபாதி யென்றும் சீவ வுபாதியைக் காரியோபாதி யென்றுங் கழறுவர்.

ஈசுவரன், சர்வஞ்ஞத்துவம், சர்வ வியாபகத்துவம், சர்வ காரணத்துவம், சர்வ சிருஷ்டித்துவம், சர்வ ஸ்திதித்துவம், சர்வ சங்காரத்துவம் என்னும் காரணவுபாதிகளுடையவன். சீவவுபாதிகள் தேகம், இந்திரியம், மனம், புத்தி, அகங்காரம், சித்தம், பிராணன் என்னும் ஏழாம்,

இவ்வாறு ஈசுவரன் சீவன் என்னு மிவ்விருவரும் உபாதிகளையுடையவர்களா யிருக்கின்றனர். அவ்விரு வகையினருடைய உபாதிகளையும் நீக்கிவிட்டால், துவம் பதத்தின் பொருளாகிய நீ என்னும் சீவனிடத்திலும், தத் பதத்தின் பொருளாகிய அது என்னும் ஈசுவரனிடத்திலும் இருக்கின்ற அசுத்தத்தையும் சுத்தத்தையும் சொல்லுகின்றேன். சசிவன்ன சாவதனமாய்க் கேள்.

## சுத்தாசுத்தப் பொருள்.

முன்னே கூறிய உடல், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் உபாதிகளேழினையும் நான் என்று அபிமானித்திருத்தல் சீவனுக்கு அசுத்தமாம். ஒருவன் 'நான்' என்று நினைக்கும்பொழுது, தேகம் முதலிய உபாதிகள் அவ்வாறு நினைக்க முடியாது. ஏனெனில் அவை அறிவற்ற பொருள்கள். அறிவுள்ள வொன்றே அவ்வாறு நினைத்தற்குக் காரணமாகின்றது. அதுவே அதிர்ஷ்டானமாகவுள்ள சாக்ஷியாம். அதுவே அறிவு வடிவமாக விளங்குகின்றது. நான் என்னும்போது இவ்வுபாதிகளும் சாக்ஷியாகிய சேதனமும் (அறிவுப் பொருள்) சேர்ந்தே நான் எனப்படுகின்றது. இது துவம் பதத்திற்குக் கூறும் அர்த்தத்தில் அசுத்தார்த்தமாகும். தேகம் முதலியவைகளை ஆராய்ந்து இவையனைத்தும் நானல்ல நானல்லவெனக் கழித்த பின் மிகுதியாகவுள்ளது எதுவோ அதுவே நான் என்னும்போது, மேற்சொன்ன உபாதிகளின்றி சாக்ஷி சேதனம் மாத்திரமே நான் என்று அழைக்கப்படுவதாகும் அல்லவா. இதுவே துவம் பதத்திற்குக் கூறும் அர்த்தத்தில் சுத்தமானதாகும். இப்படி துவம் பதத்திற்குச் சுத்தம் அசுத்தம் என்னும் இரண்டு அர்த்தங்களிருத்தல் காண்க. இவ்வாறே,

'தத்' பதத்திலும் இரு பொருள் உண்டு. எங்ஙனமெனின், ஈசுவரன் சர்வஞ்ஞத்வம், சர்வ காரணத்துவம், சர்வாந்திரியாமித்துவம், சர்வேசுவரத்துவம் சர்வ சிருஷ்டித்துவம், சர்வ ரக்ஷத்துவம், சர்வ சம்ஹாரத்துவம் என்னும் உபாதிகளுடன் கூடியவன். ஈசுவரன் இந்த ஏழுபாதிகளேயும் அவற்றின் அதிஷ்டான சேதனத்தையும் நான் என்றெண்ணுவது தத் பதத்திற்குக் கூறும் அசுத்தார்த்தமாகும். அந்த சர்வ காரணத்துவம் முதலிய உபாதிகளைவிட்டு சாக்ஷியாகிய பிரஹ்மம் நான் எனல் சுத்தார்த்தமாம்.

காரிய உபாதி (சீவ உபாதி) காரண உபாதி (ஈசுவர உபாதி) என்னும் இரண்டு உபாதிகளும் சப்தோபாதிகளாம். எனவே சொல்மாத்திர உபாதிகளன்றி யதார்த்த உபாதிகளன்று; கடாகாயம் போல.

கடம் (குடம்) மடம் (வீடு) என்னும் இவ்விரண்டின் உபாதி பேதத்தால் ஆகாயம் கடாகாயம் என்றும் மகாகாய மென்றும் பேதித்துக் கூறப்படுகின்றது. குடம் மடம் என்னும் உபாதிகளை நீக்கிக் காணின் ஆகாயம் ஒன்றேயாகின்றது. அப்படியே சீவனின் உபாதியால் சீவசாக்ஷி யென்றும் ஈசுவரனின் உபாதியால் ஈசுவர சாக்ஷி யென்றும் வெவ்வேறாகக் காணப்படுகின்றன. இவ்வுபாதிகளை நீக்கினால் பிரஹ்மம் ஒன்றாகவே காணப்படும். அதனால் வெவ்வேறாகக் கருதி யிருந்த பேத புத்தி நீங்குகின்றது. அப் பேத புத்தி நீங்குவதே 'அசி' பதத்தின் அர்த்தமாம்.

அசுத்தமானது, தத் பதம், துவம் பதம் என்னு மிவ் விரண்டினு மிருந்தபோது முக்கியார்த்த மென்றும், சுத்தமானது, தத்பதம் துவம் பதம் என்னு மிரண்டினு மிருந்தபோது லட்சியார்த்தமென்றும் பெரியோர் கூறுவர். அதாவது ஜீவ சொரூபமும் ஈசுவர சொரூபமும் உபாதியோடு சம்பந்தப்பட்டு நின்றபோது முக்கிய மென்றும், உபாதியைப் பிரிந்தபோது லக்ஷியமென்றும் பெரியோர் சொல்வர். உபாதியை நான் என்றபோது அசுத்தம். உபாதிக்குச் சாக்ஷியமானபோது சுத்தம்.

ஒரு பதத்தின் நேரான அர்த்தம் முக்கியார்த்தம் எனப்படும். உதாரணமாக குடம் என்று ஒருவன் கூறின், குடம் என்னும் அந்தப் பதம், அப் பெயரா லழைக்கப்படும் ஓர் பாண்டத்தையே குறிக்கின்றது. இதுவே முக்கியார்த்தம். ஒரு பதம் தன் நேரான பொருளைக் காட்டாமல் வேறு பொருளை யுணர்த்துவது லட்சியார்த்தமாகும். உதாரணமாக காளை வந்தான் என்பதின் முக்கியார்த்தம் எருதைக் குறிப்பினும் லக்ஷியார்த்தமாகக் கொள்ளுமிடத்து ஓர் புருடனைக் காட்டுவதாகும். ஆகவே,

உபாதி பேதத்தால் ஒன்றற் கொன்று விரோதத் தன்மையுடைய சீவனும் ஈசுவரனும் முக்கியார்த்தம், இரண்டினிடத்தும் உள்ள வேற்றுமைத் தன்மை (பேதம்) இல்லாத சின்மாத்திர சொரூபம் இலட்சியார்த்தமாம்.

சசி:—சீவ ஈசுவரர்களின் ஐக்கியம் எப்படிப் பொருந்தும்? என்பதை ஆசிரியரேறே! விளக்கியருள வேண்டும்.

மாநந்தி:—சீவேசுவரர்களின் உபாதிகளை இலட்சண வாக்கியத்தின்படி நீக்கினால், இரண்டிற்கும் சாக்ஷி (ஜீவசாக்ஷியாகிய கூடஸ்தனும் ஈசுவர சாக்ஷியாகிய பிரஹ்மமும்) ஒரு வஸ்துவேயாம்.

(தொடரும்)

# "வர்த்தக சிரோமணிகள்"


















# மாதர் உலகம்



## பிராட்டியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

:(o):

(125-ம் பக்கத் தொடர்ச்சி.)

மன்பதைகள் சோரவும், மன்னவர் தயங்கவும், சம்பரனை வென்று அமரர் கோமானின் சஞ்சல மகற்றி உலகனைத்தினையும் அடிப்படுத்திப் பல்லாயிரக் கணக்கான வருஷங்கள் உறுபகையின்றி மன்னுயிர்களையும் தாவரமாதி இன்னுயிர்களையும் தன்னுயிர் என ஓம்பி வந்த சக்கரவர்த்தி ஆவி நீங்கவும், மக்களை மாதர் மறக்கவும், ஒக்கலையுரியர் துறக்கவும், ஏற்பட்ட இவ் வனவாஸத்தில் சிறிதும் கவலையுறாதவர் நமது பிராட்டியார் ஒருவரே யென்பதை மறுப்பதற்கில்லை. பெண் பாலார்கட்கு அற்ப வஸ்துக்களிலும் பற்றுவிடுவதில்லை என்பது இயற்கையே. உடைந்த பாண்டங்களையும், சிதைந்த ஆடைகளையும், ஓட்டையான தட்டு முட்டுகளையும், நைந்த நாண்களையும் ரஸம் குன்றிய கண்ணாடிகளையும் காதற்ற ஊசிகளையும் கூடப் புறத்திலெறிய மனம் வராமல் வைத்துப் போற்றும் குணம் செல்வர் வீட்டில் பிறந்த சீமாட்டிகளுக்கும் உண்டு. இதனைத் தவறாகக் கருதிக் குறிப்பிடுவதன்று. அன்னிய நாட்டுச் சாமான்களைவிட நம் நாட்டில் செய்யப்பட்ட ஒடிந்த மரப்பதுமையும், முறிந்த தடியும், அறுந்த வாருள்ள பாதுகையும் கூட ஒவ்வோர் விஷயங்களுக்கு உதவும். ஆனால் பிராட்டியார் அரச குடும்பத்தில் வளர்ந்து அரச போகத்தில் திளைப்பவராதலால் அற்பமான மேலே சுட்டியபடியான சாமான்களைக் கண்டிருக்கவு முடியாது. என்றாலும் தனது சுகபோகங்களுக்கு இன்றியமையாத பல சிறந்த பொருள்கள் மனதைக் கவரத்தக்கவைகள் அரண்மனையில் இருப்பதியல்பு. அவைகளைப் பிரிவதிலாவது, அகண்ட பூமண்டலாதிபத்தியம் கணத்தில் தனக்கு இல்லை யென்கிற முடிவைக் கேட்டதினாலாவது, ஆடையாபரணங்களை எண்ணியாவது அல்லல் கூர்ந்திருக்கக்கூடாதோ?

உண்மையில் அகப்பற்றறுத்த ஆத்மஞானியர் வணங்கும் ஆசானாகிய ஜனகரால் வளர்க்கப்பட்ட இவருக்கு இவைகளிலெல்லாம் மயக்கம் உண்டாகாதது இயற்கையே யாகும். தனது உயிரினும் சிறந்த காந்தனைப் பிரிந்திருப்ப தொன்றே அவருக்கு சகிக்கக்கூடாததாகத் தோற்றியது. அதிலிருந்

தும் தான் விடுதலைபெற்ற தொன்றே அவருக்கு அளவிறந்த மகிழ்ச்சியைத் தந்தது. ஈசனோடுறவு கொள்ளப்பெற்ற மெய்யறிவினர் உலகாயதப் பொருள்களை எண்ணி யிரங்குவரோ? அழியாப் பேரின்பமெய்தினோர் அழியக்கூடிய புன்மை யின்பங்களை வெறுப்பதுபோலவே பிராட்டியாரும் மரவுரி புனைந்து மன்னனோடு வழி கடக்கத் தொடங்கினர்.

பொன்னிடத்து மையல் கொள்வோர் மாந்தரே யன்றிப் பொன்னல்ல. அதுபோல, பாக்கிய தேவதைக்குப் பாக்கியங்களில் பற்றிருப்ப தெங்ஙனம்? இவ்வாறு சென்றவர்களைத் தொடர்ந்து சென்ற தேர்ப்பாகனாகிய சுமந்திரன் விடை கொண்டபோது பிராட்டியார் கூறியதாகக் கவியரசர் தீட்டியுள்ள,

"அன்னவள் கூறுவாள் அரசர்க் கத்தையர்க்
கென்னுடை வணக்க முன்னியம்பி யானுடைப்
பொன்னிறப் பூவையும் கிளியும் போற்றுகென்
றன்னுமென் தங்கையர்க் குணர்த்துவா யென்றாள்."

எனவரும் செய்யுளினால் பிராட்டியாரின் கவலை யின்மையும் இளமைக்குரிய களங்கமற்ற மன நிலைமையும், மாமன் மாமியர்பால் சிறிதும் குறையாத மரியாதையும் தெற்றெனப் புலனாகின்றன.

முடிசூட்டக் குறித்த தினத்தில் முற்றுமிழந்து பஞ்சைகள்போல் பறக்க வடித்த மாமிக்கு உலகில் எந்த மருகி வணக்கமுள்ள வழிபாட்டினைத் தெரிவிப்பாள்? இஃதொன்றே பிராட்டியாரின் மனிதவியல் கடந்த புனிதத் தன்மையை விளக்குவதாகும். தான் வளர்த்த பூவை, கிளி இவைகளின் மீதுள்ள நேயமட்டில் இவர் உள்ளத்தில் இடம்பெற்றது. உயிர் நேயமாகிய கருணை தெய்வ குணமாதலின் அதனை மறந்தாரில்லை. இது குறித்தே முதலில் சதானந்தர்,

"குணங்களை யென் கூறுவது
கொம்பினைச் சேர்ந்தவை யுய்யப் பிணங்குவன."

என எடுத்துக் காட்டியுள்ளார் போலும். இவர்கள் சென்றடைதலால் கங்கைக் கரையில் வதிந்த தபோதனர், அனைவரும் தாங்கள் அடைய விரும்புவதாகிய (செல்கதி) மோட்சவின்பமே தம்மை நாடி வந்ததாகக் கருதிப் பெருமகிழ்வெய்தினர் என்று கூறிய கவி பிராட்டியாரை அத்தவத்தினர் கண்டபோது,

"பெண்ணினோக்கும் சுவையிற் பிறர் பிறர்க்
கெண்ணினோக்கி யியம்பரு மின்பத்தைப்
பண்ணினோக்கும் பராவமுதைப் பசுங்
கண்ணினோக்கினர் உள்ளங் களிக்கின்றார்."

என இன்புற்றனர் எனக் கவி எடுத்துக் காட்டுகிறார். பிராட்டியாருடைய தெரிசனத்தினால் தவக்கனலால் வற்றிச் சுருங்கியிருந்த விரதியர்களின் கண்களும் குளிர்ச்சியும் மகிழ்ச்சியும் பெற்றன என்பதைக் குறிப்பதாகப் பசுங் கண்ணினால் என்று கவி போற்றுகின்றார். முற்றத் துறந்த முனிவர்களுக்கும் நாவினர் சுவை காண்பதுபோல் காட்சியின் சுவையைக் கண்களால் காண்பதில் உணர்ச்சி எழுந்தது.

பண்ணி ஞேக்கும் பாரவமுதமாகவும் அறிவாற் பருகி யின்புற்றனர் என்றும், பிறர் பிறர்க் கெண்ணி ஞேக்கியியம்பரும் இன்பத்தை என்றும் குறித்தலால் இன்னதென இயம்பொஞாத பேரின்பக் காட்சியென ஒருவாறு முடிக்கின்ருர். இதனுலெல்லாம் பிராட்டியாருக்குத் துன்பமென்பது ஒரு சிறிதும் உள்ளத்தில் கால்கொள்ளவில்லை யென்பது தெளிவாகின்றது. செல்வம், பதவி, போகம் இம்மூன்றிலும் இச்சைகொள்ளாத ஓர் அரச புத்திரியை எவ்வாறு துதிப்பது? திருவருட் பிரகாசவள்ளலார் தெய்வமணி மாலையில்,

"நிலையுறு நிராசையாம் உயர் குலப் பெண்டிர்"

என எடுத்தாண்டிருப்பது ஈண்டு நினைவிற்கு வருகிறது. நிலைத்த நிராசையே வடிவமான மனைவியரைப் பெற்ற பேற்றினுலேயே ருஷ்ய ஞானியாகிய டால்ஸ்டாயும், மகாத்மா காந்தியடிகளும் சூரிய பிரகாசம்போல் இன்றும் உலகில் பிரசித்திபெற்ருெளிர்கின்றனர் என்பது மிகையாகாது. பிராட்டியார் வனத்திற்குத் தானும் உடன் வரும் விஷயத்தில் இராமரின் கருத்தை நிராகரித்து எவ்விதமாகவோ தன் எண்ணத்தை இராமர் ஏற்கும்படி செய்த சக்தியை நோக்கும்போதும், பின்னல் மாய மானைப் பற்றித் தருதல்வேண்டும் என்கிற அவாவினுல் ஒருங்கே இராமர் இலக்குவர் ஆகிய இருவர்களின் முயற்சியும் பயன்படாமற் செய்ததாகிய ஆற்றலையும் நோக்குங்கால், பிராட்டியாருக்கு அரசுரிமையில் ஆசையிருந்திருக்குமேல் இராமன் இந்த விரதத்தினை ஏற்றிருக்கவு முடியாமல் தவிர்க்கவும் நேர்ந்திருக்கலாமென்று ஊகிப்பதும் மிகையாகாது. உண்மையாகவே தந்தையும் தாயும் இட்ட கட்டளை யாதாயினும் அதை ஏற்கவேண்டியதே கடமை என்பது பிராட்டியாரின் திடமான எண்ணமாதலின் இதற்காக ஏனைய நஷ்டங்களை ஒரு பொரிதாக எண்ணவில்லை; அன்றியும் சிற்றின்ப மெனப்படும் உலகபோகத்திற்காகவே ஆண் மகஞெடு பெண்மகளின் கூட்டுறவு ஏற்பட்டதாக எண்ணியிருந்தாலும் மரவுரியுடுத்துத் தவக்கோலம் பூணத் தயங்கியிருப்பர். அத்தகைய சிறுமைக் குணமும் இன்றி தியாகத்திற்கு அஞ்சாத பெருந்தகைமை பிராட்டியாரிடம் இருந்தது. என்பிடைக் கலந்து பரிணமித்த தூயமெய்யன்பே தனது கேள்வனைப் பிரியமுடியாத நிலையை உண்டுபண்ணியது.

பிரதான அம்சமாகிய அரச போகத்தைத் துறந்தது பற்றி ஒரு சிறிதும் குறுக்கிடாது தன் தவ ஒழுங்கினைத் தானும் பின்பற்றிய பிராட்டியாரின் குணத்தின் நேர்மை கண்டே இராமனும் சிறிய கொள்கையாகிய உடன் போதலுக்கு இசைந்தவராயினுர். இந்நிகழ்ச்சியினுல் மகளிரின் கருத்து ஒற்றுமைப்பட்டிருப்பதனுல் போதரும் நன்மையும் புலஞகின்றது. எத்தகைய வீரப்பிரதாபர்களாயினும் வீட்டிலுறையும் பெண்கள் இணக்கம் பெருரெனின் அவர்தம் முயற்சி முற்றுருதென்பது திண்ணம். சக்கரவர்த்தியின் ஆணை அவர் மனைவியாகிய கைகையினுல் அழிக்கப்பட்ட தொன்றே இதற்குத் தக்க சான்ருகும். பிராட்டியார் கணவனின் நிராசைக்குத் துணை நின்றதொன்றே அவர் புகழ் நிலவுலகில் நின்று நிலவுவதற்கும் தக்க உதாரணமுமாகும். இத்தகைய பிராட்டியாரைத் தபோதனர்கள் நிவர்த்தியின் சோபையாகவே தரிசித்து இன்புற்றதில் வியப்பென்னை? செல்வந் துறந்ததில் மனத்தே சிறிது வருத்தம் இருப்பினும் அது புறத்தே மறைக்க முடியாதிருக்கும். களங்கமற்ற உள்ளமுடைய இவர் திருமுகம் கண்ட முனிவரர்களது இதையங்களை ஆநந்தப்படுத்தி ஆநந்தத்தின் அடையாளமாகிய விழி நீர் அரும்பிக் குளிர்ந்தனர்.

இது பற்றியே கவியரசர் பசுங் கண்ணிற் கண்டனர் எனப் பகரத் துணிந்தனர் போலும்.

இத்தகைய பிராட்டியார் சித்திரகூடத்தில் இலக்குவனால் அமைக்கப் பட்ட தழைக்குடிலில் கவலாது புகுந்தமர்ந்தனர். இராமன் மட்டில் அது கண்டு மனம் சகியாது,

"மிதிலையர்கோன் மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவிலெம்பிகைச் சாலை சமைத்தன
யாவை? யாதுமிலார்க் கியையாதவே."

என எண்ணி இரங்குகின்றார். ஆனால் பிராட்டியார் அவ்வாறும் எண்ணியதாகத் தெரியவில்லை. பின்னர் இராமனை நாடி வனம் போந்த பரதனால் சக்கரவர்த்தி இறந்தமை யுணர்ந்தபோதுதான்,

"அன்னமும் துயர்க்கட லடிவைத் தாளரோ"

எனக் கவி கூறினர். கண்டோரையும் மகிழ்விக்கும் களிக்கடவுளாக விளங்கிய காரிகை துன்பமாகிய கடலிடை இறங்கத் தொடங்கி அடியிட்டார் என்று விளங்குகின்றது. தனது நாயகனுக்குரியதாய நானிலத்தினை மாற்றாந் தாய் மகனுக்களித்ததோடு நில்லாமல் வனத்திற்கும் செலுத்திய அரசன் இருந்தாலென்? இறந்தாலென்? என மக்களினத்திற் பிறந்த எவருமெண்ணுவர். நமது ஜானகிக்கோ அத்தகைய எண்ணம் கடுகளவும் தலைகாட்டவில்லை. முடியா முடிமன்னன் முடிந்தமை கேட்டு ஆற்றாது வாய்விட்டரற்றினர். புல்லினாலும் தழைகளினாலும் அமைக்கப்பட்ட பிராட்டியார் இருந்த தவச்சாலையையும் அதிலிருந்த ஜனக புத்திரியையும் கண்ட பரதன் மனம் சிதறி,

"கைகளிற் கண்மலர் புடைத்துக் கான்மிசை
அய்யன் அப்பரதன் வீழ்ந்தரற்றினான்."

எனக் கவிவேந்தர் பரதனது துன்பத்தினைக் குறிப்பிடுகின்றார்.

வனம் புகப் பணித்த கைகேசியுள்பட மாமிமார்கள் ஜனகன் பூவையைத், துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினர் எனக் கூறுவதனால் வன்மங்கொண்ட கைகை யுள்ளமும் பிராட்டியாரின் தனிமையையும் எளிமையையும் காணத் தரியாது கரைந்ததெனில், அன்புடைய பிறர் நிலையை அளப்பதெங்ஙனம்? பிராட்டியார் படிப்படியாகத் துன்பக் கடலின் ஆழ்ந்த விடத்தை யணுகுவதற்கு இந்தத் துக்காரம்பமே கால்கோள்விழா வாகியது; பிறகு சாபத்தினால் அரக்கர் வடிவங்கொண்டு உணர்விழந்து வனத்திலுழன்ற விராதனால் கவரப்பட்டு உடனே மீட்கவும் பட்டனர் பிராட்டியார். பின்னாலெய்தும் பெருங் கேட்டிற்கு முன்னாலெய்தும் அறிகுறியாகவும் கொள்ளலாம். இதை யடுத்து நேர்ந்த நிகழ்ச்சி சூர்ப்பநகையாகிய இராவணன் தங்கையின் வரவேயாகும்.

அரக்கர் குலமனைத்து மடியவேண்டிய காலம் மிகமிக நெருங்கியதால் ஊழினால் உந்தப்பட்டனள். இவ்வரக்கி, தற்செயலாகப் பஞ்சவடியை யடைந்து, அங்கே வசிக்கும் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினனாகிய

இராமனைக் காண்கின்றாள். மூவுலகமும் தடையின்றிச் சஞ்சரிக்கும் இக் கொடியாள் இராமனது சவுந்தரியத்தினைக் கண்டு திகைப்புற்று பேரதிசய மெய்துகின்றாள். அவ்விடையில் சாலையினின்றும் வெளிவந்த பிராட்டியாரையும் காணப் பெறுகின்றாள். இவ்விடத்தில் கவியரசர் அரக்கரென்னும் வனத்தைச் சுட்டெரிக்கப் பிறந்திருக்கும் கற்புக்கனலாகிய பிராட்டியாரை "வான்சுடர்ச் சோதி வெள்ளம் வருவது போலக் காண்கின்றாள்" என ஆரம் பக்காட்சியிலேயே அவதார ரகஸ்யத்தினையும் காட்சிக்கினிமையையும் உணர்த்துகின்றார். சோதி யென்பதே கண்கவர் தன்மையைக் காட்டும். அதிலும் சுடர்ச்சோதி யென்பது தனக் கொப்பாயதும் மேம்பட்டதும் வேறிலாத தென்பதை மீமிசையாகக் குறிக்கின்றது. அதனிலும் ஒருபடி சென்று வான்சுடர்ச்சோதி என்பது, பிராட்டியாரின் தோற்றம் மனித நீர்மை கடந்தது என்பதைத் தெளிவுபடுத்துவதாகும். இவ்வாறு திடுக்கிட்ட சூர்ப்பநகை தானே தன்னுள்,

"உருவிங்கி துடையராக மற்றையோர் யாருமில்லை
அரவிந்த மலருள் நீங்கி யடியிணை படியிற்றோயத்
திருவிங்கு வருவாள் கொல்லோ ?"

என்று எண்ணித் திகைத்து நிற்கின்றாள். இவ்வாறு தான் பிறந்தது தொட்டிதுகாறும் காணாத காட்சியைக் கண்டு திகைப்புற்ற அரக்கி வேறு சிந்தனை தோன்றாமல் நெடுநேரம் நோக்கி நோக்கிப் பின்னர் ஒரு முடிவிற்கு வருகின்றாள். அதாவது சிருஷ்டி கர்த்தாவின் திறமையின் குறைவேயன்றி அழகென்பதற்கு ஓர் எல்லையில்லை யென்பதே யாகும். இதனைப்,

"படைக்குநர் சிறுமையல்லால் எண் பிறங்கழகிற் கெல்லையில்லையா
மென்று நின்றாள்."

எனுந் தொடரிறைற் சுட்டுகின்றார் கவியரசர். அன்றியும்,

"கண்பிற பொருளிற்செல்லா கருத்தெனில் அஃதே கண்ட
பெண்பிறந் தேனுக்கென்றால் எனப்படும் பிறருக்கென்றும்"

எண்ணியதாக எடுத்துக் காட்டுகின்றார். பெண்கள் பெண்களைக் காண்பதனால் எவ்வித தடுமாற்றமும் ஏற்படாது, மயக்கம் பிறவாது, இச்சையெழாது, வியப்பொன்றே ஏற்படும். அத்தகையான இயற்கைச் சட்டத்தினையும் கடந்து கண்டது போதுமென்று கண்களையும் கருத்தையும் பறித்துத் திருப்ப எனக்கே முடியவில்லை யென்றால் இவளது பேரழகின் பிரவாகத்தை ஆடவராகப் பிறந்தார் காணின் அவர் நிலை யாதாகும் ? என அலமரல் எய்தினாள் என்பதே அதன் பொருள். சூர்ப்பநகை இவ்வாறு கண்கவர் வனப்புடைய காட்சியைப் பற்றிப் பல படச் சிந்தித்துத் திகைத்து நிற்கையில் சாலையிலிருந்தும் வெளிப்பட்டுவந்த பிராட்டியார் இராமனை யணுகி யருகில் நின்றனர். தனித் தனியாகக் கண்டே மனதாலும் வருணிக்க முடியாத அழகினையுடைய அவ்விருவரும் ஒருங்கே சேர்ந்து 'நின்றதைக் கண்டபோது எவ்வாறு மதிப்பிட முடியும். உண்மையில் சூர்ப்பநகை அரக்கியாயினும் பழந் தவம் புரிந்தவளே யாதல்வேண்டுமென இதனைப் படிப்போர் எவர்க்கும் தோன்றாமலிருக்க முடியாது.

புண்ணிய முடையோர்கட்கன்றி இவ்வொருமைப் பொற்பின் பொரு வில் காட்சி காணக்கிடைக்குமோ? தலைகளையறுத்து ஓமத்தீயிலிட்டு பல்லாயிரமாண்டுகள் தவம் செய்தவனுகக் கூறப்படும் இலங்கேசனுக்கு இந்த தெரிசனம் வாய்க்கவில்லை. தேவ காரியத்தினை முடிக்கத் தோன்றிய பிரதம பாத்திரம் சூர்ப்பநகையே யாதலின் இவ்வொப்பில்லாத சன்மானத்தைப் பெறத்தக்கவளாக எண்ணுதலே சால்பு. இவ்வாறு இருவரையும் ஒருங்கே கண்டபோது அவ்வரக்கி ஒப்பு நோக்கி,

"கருதமற்றினி வேறில்லை கமலத்துக் கடவுடானே
ஒருதிறத் துணரநோக்கி உருவினுக் குலகமூன்றின்
இருதிறத்தார்க்கும் செய்த வரம்பிவர் இருவர் என்றாள்."

எனக் கவி முடிவுகாண்கின்றார். இராமாயணம் முழுமையும் தேடினும் இருவரிலும் எவர் பொலிவு சிறந்ததென்றறியவோ, சமமென்றுன்னவோ இடமில்லை. சூர்ப்பநகை வாயிலாகத்தான் கம்ப நாடர் இருவரும் தனித் தனி இருபாலார்க்கும் அழகின் எல்லையைக்காட்ட இரு உதாரணங்களாகப் பிதாமகரால் படைக்கப்பட்டவர்கள் எனத் துணிந்து கூறுகின்றார். உயர்வு தாழ்வின்மையே வெளிப்படுகின்றது. இத்தகைய சிறப்பமைந்தோர் தம்பதிகளாக அமைவது தரணியில் இல்லை. நிறையும் குறைவுமாகவே இணைக்கப் படுவதியல்பு. இயற்கைக்குமாறாக இது நிகழ்ந்திருக்குமாயினும் இத்தகைய மெல்லியலைக் கல்லும் முள்ளும் செறிந்து வனசரரே சஞ்சரிக்கத்தக்க வனத்திற்கு அழைத்துவந்து அல்லல்தர எவன் துணிவான்? ஆதலின் உரிய மனைவியுமல்லள். அழகினுற் காதலித்துச் சேர்ந்த சோர நாயகியாகவே யிருத்தல் கூடும். அங்ஙனமாயின் இவ்விருவரிடையும் மனவேற்றுமையை உண்டாக்குதல் வேண்டும். அது முயன்றால் முடியும் எனத் தனக்குள் ஆலோசிக்கின்றாள். உருவத்தால் இகழவோ இடமில்லை. குணத்தாற் கொடியவளெனக் கூறுவது சரியான உபாயமாக எண்ணினாள். இவ்வளவு சித்தாந்தம் செய்ய வல்ல சூர்ப்பநகைக்கு இவ்வுபாயம் புதியளாக வந்த தன்னால் பழகிவரும் அவர்களுக்குள் பயன்படும் படாதென்பது ஏன் புலப்படவில்லை என்று வாசகர்கள் கருதலாம்.

இராமனைக்கண்டது முதல் அவரது சவுந்திரியத்தில் மூழ்கி மதிகெட்டு எவ்வாறாயினும் அவரையடைந்தாலன்றி உயிர் வாழ்வதில்லையென்று பேதுறும் நிலையே சூர்ப்பநகை நிலை. கரைகடந்து பொங்கும் கடல்போல் அவளது காதல் நோய் வளரத் தொடங்கியது. பேரறிவுடையாரும் இந்நோய்க்குள்ளாவரேல் கண்ணிழப்பர் என்பது மறைமொழியாகும். அங்ஙனமிருக்க கட்டுக் காவலையும் பழிபாவத்தையும், நாணம் மடம் முதலிய ஒன்றையும் அறியாது இச்சைப்படி முயலும் இயற்கையையுடைய இந்த சூர்ப்பநகை எவ்வாறு கண்ணுடையளாயிருத்தல் கூடும்? எவ்வகையிலாவது பெண்ணழகியைப் பிரித்தாலல்லது ஆணழகன் வசப்படான் என்று திண்ணமாக எண்ணினாள். பிரித்தாளுந்தந்திரம் சுயநலம் விழைவோர்பால் எந்த யுகத்திலும் கைக்கொள்ளப் பட்ட ஓர் ஆயுதமென்பது புலப்படுகின்றது. இம்முடிவுக்கு வந்த அரக்கி இராமனை நோக்கிப் பின்வருமாறு கூறலானாள்.




# "என்ன செய்கிறேனோ பார் உன்னை"



(பண்டிதை. ரா. ரங்கநாயகி.)

துன்ப வெள்ளத்தால் தத்தளித்துக்கொண்டிருக்கும் மனக்கடலில், குழந்தைகள் பேசும் குழலினும் இனிய மழலை மொழிகள், ஒவ்வொரு சமயத்தில் ஆசை அலைகளைக் கிளப்பி இன்பப்பெருக்கை உண்டாக்கி விடுகின்றன. தினந்தோறும் சாப்பாடு முடிந்தவுடன் இரவில், புழக்கடை மரத்தடியில் உட்கார்ந்து பாத்திர பண்டங்களைத் துலக்கிக் கொண்டே தனது கஷ்ட நஷ்டங்களை யெல்லாம் ஞாபகப்படுத்தி உருவாக்கிக் கட்புலனில் நிறுத்திக்கொண்டிருக்கும் மீனாக்ஷி ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் பரமானந்த பரவச ளாகிவிடுவாள்!—கண்ணன் பேசும் பேச்சுக்களைக் காதில் கேட்டுக்கொண்டிருந்தால்.

அன்றைக்கு அமாவாசை. எங்கும் கன்னங்கரேல் என்ற காரிருள் சூழ்ந்து கிடக்கிறது. எப்பொழுதும்போல் சாப்பாடு முடிந்தவுடன் தன் வேலையைக் கவனிக்கப் புழக்கடைப் பக்கம் போய்க்கொண்டே "அடே அப்பா! கண்ணு! நீ இந்தக் கட்டிலில் உட்காரமாட்டாயா என்ன? நான் புழக்கடையில் பற்றுத் தேய்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றாள் மீனாக்ஷி மெதுவாக.

"ஊ—ஊ—ஊ நான் மாட்டேன். நானுங்கூட அங்கேயே வந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறேன்" என்றான் கண்ணன்.

"கண்ணே நீ தங்கக்கட்டி! அநேகமாய் நாளைக்கு உன் மாமா வந்து விடுவார். மிட்டாய்—பூட்ஸு—சொக்காய்—குடை எல்லாம் வாங்கிக் கொண்டு வருவார். உனக்குக் கொடுக்க வேண்டாமா என்ன?"

"ஊ—நானும் வருவேன்..........."

"உனக்கு வெல்லக்கட்டி கொடுக்கிறேன்—தின்று கொண்டே உட்கார்ந்திரு அம்மா!"

"ஊ—ஊ—எனக்கு எதுவும் வேண்டாம். ஊ......ஊ......"

"இருட்டுடா கண்ணு! என்ன செய்து தொலைவேன்? எல்லாரும் மலைபோல இருந்துங்கூடத் திக்கற்ற பக்ஷியாகி விட்டேன். எத்தனையோ கடிதங்களை எழுதிப் பார்த்தேன்—ஏனென்றுங் கேட்பாரில்லை. எட்டியும் பார்க்கவில்லை. "அவள் எப்படி ஒருத்தி—ஒன்றியாக இருந்து சமாளிப்

பாள்" என்று யாருக்கும் இரக்கமும் வரவில்லை. உதயாஸ்தமனமும் இப்படியே நொண்டும் நொடியும் அடியும் உதையும் பட்டுக்கொண்டு காலக்ஷேபம் செய்ய யாரால் முடியும்? எத்தனை பேச்சு! எத்தனை செருப்படி! சிவ! சிவ! எனக்கு ஒரு சாவேனும் வரக்கூடாதா? கடவுளுக்கும் கண்ணில்லையா? பையனைப் பார்த்துக்கொண்டு பேச்சுத் துணைக்கேனும் சகாயமாயிருப்பாள்—வீரம்மாளை அனுப்புங்கள் என்று அப்பாவுக்கு எத்தனை கடிதங்கள் எழுதினாலும் மூச்சுப் பேச்சில்லை. வெகுதூரத்தில் இருக்கிறாள் என்று இவ்விதம் அலக்ஷியம் காட்டி வருகிறார்கள் போலிருக்கிறது. சரி! விட்டு விடுங்கள். இந்தப்பழம் எப்போது உதிர்ந்து போகுமோ—எப்போது மரத்தின் பாரம் குறையுமோ என்றே நானும் எண்ணிக்கொண்டிருக்கிறேன்—எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்தக் குழந்தையின் மீது இன்னும் கொஞ்சம் ஆசை வைத்துக்கொண்டு—நல்ல காலம் பிறக்காதா என்று முன்னும் பின்னும் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறேன். இல்லாவிட்டால் இதற்குள் அங்கே உங்கள் பாரத்தையும் இங்கே இவர்கள் பாரத்தையும் குறைத்து விட்டிருப்பேன்" என்று எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாகி, துன்பப் பளுவைத் தாங்க மாட்டாதவளாய்ப் பக்கத்திலிருந்த சுவரில் தலையைச் சாய்த்துச் சுருண்டு விட்டாள் மீனாக்ஷி.



தன்னைப்பெற்ற தாய் இவ்வாறு துன்பத்தால் வருந்தியதைக்கண்ட கண்ணன் "அம்மா எழுந்திரு............அம்மா எழுந்திருக்க மாட்டாயா" என்றான் கண்ணன் அழுது கொண்டே. மீனாக்ஷி தலையை மேலே எடுக்கவில்லை.

"அம்மா! எனக்குத் தூக்கம் வருகிறது. எழுந்திருக்க மாட்டாயா? ஊ...... ஊ......" என்று கையைப் பிடித்துக்கொண்டு இழுத்தான் கண்ணன்.

அப்பொழுது மீனாக்ஷி தனது முன்றானையால் கண்களைத் துடைத்துக்கொண்டே "வா அப்பனே—வா படுக்க வைக்கிறேன்" என்று கண்ணனைச் சேர்த்து எடுத்துக்கொண்டுபோய், கட்டிலில் படுக்க வைத்து, சிறிது நேரம் அங்கே உட்கார்ந்து விட்டு மறுபடியும் புழக்கடைக்குப் போக எழுந்தாள். மீனாக்ஷி எழுந்தவுடனே "அம்மா" என்று கூவிக்கொண்டே எழுந்து உட்கார்ந்து "நானும் வருவேன்" என்று அழத் தொடங்கினான் கண்ணன்.

"இருட்டானாலும்—ஜாமமானாலும் எனக்குத்தான் தூங்காமலிருக்கத் தலைவிதி—உனக்குங்கூட ஏன் அப்பனே இந்தத் தொல்லை—சுகமாய்ப் படுத்துறங்காமல்" என்று சொல்லிக்கொண்டே கட்டிலின் பக்கம் வந்து நின்றாள் மீனாக்ஷி. "எடுத்துக்கொள்............எடுத்துக்கொள்........." என்று தனது இரண்டு கைகளையும் நீட்டிக்கொண்டு நின்றான் கண்ணன்.

"இருட்டுக்கால மடா அப்பனே! புழுப்பூச்சிகள் திரிந்துகொண்டிருக்கும். இதற்கு முன் நான் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது ஒரு பாம்புக் குட்டியை அடித்தேன். நீயும் பார்த்தா யல்லவா? சொன்னபடி கேள்."

"ஆ......ஆ......ஆ......"

"சரி—வா—எல்லாவற்றிற்கும் கடவுள் இருக்கிறார்" என்று அவனை எடுத்துக்கொண்டு புழக்கடைக்குப் போய், பக்கத்திலேயே உட்கார வைத்துக்கொண்டாள்.

***

"அம்மா! எனக்கு மாமா—சொக்காய்—பூட்ஸ்—குடை எல்லாம் வாங்கிக்கொண்டு வருவார் என்று சொன்னுய்—எப்போது வருவார்?" என்றான் கண்ணன்.

"நாளைக்கு வருவார்" என்றாள் மீனுக்ஷி.

"மாமாவுக்கு எந்த ஊர் அம்மா?"

"தஞ்சாவூர்"

"ஊஹூ......தஞ்சாவூரா?"

"ஆனுல், மாமா என்றால் யார் அம்மா?"

"மாமா என்றாலா? எங்கள் அண்ணு!"

"ஊஹூ......உங்கள் அண்ணுவா?"

"பிறகு......சின்னம்மா என்றாலோ?"

"சின்னம்மா என்றால் இன்னொரு அம்மா."

"ஆ.....சும்மா......நீ பொய் சொல்லுகிறாய். ராமுவுக்கும், கந்தனுக்கும் இன்னொரு அம்மா இல்லையே—அது ஏன்?"

"அவர்களுக்கு இன்னொரு அம்மா இல்லை."

"சின்னம்மாளுக்கு எந்த ஊர் அம்மா?"

"சின்னம்மாளுக்கு எந்த ஊர் என்று எனக்குத் தெரியாது அப்பனே!"

"சரி, சின்னம்மா இன்றைக்குச் சாப்பிட வரவில்லையே ஏன் அம்மா? என்றான் கொட்டாவி விட்டுக்கொண்டே.

"சின்னம்மாளுக்கு என்மேல் கோபம் இன்றைக்கு" என்றாள் மீனுக்ஷி.

"ஏன் கோபம் வந்தது?"

"நான் காலையில்—நேரத்தில்—சமையல் செய்து படைக்கவில்லை என்று."

"நீ தான் தினமும் காலமே எனக்கும், அப்பாவுக்கும், சின்னம்மாவுக்கும், சுடு சாதம் சமைத்துப் போடுகிறாயே."

"இன்றைக்கும் நேரத்திலேயே சமையல் செய்தேன்—அது கொஞ்சம் ஆறிப்போய் விட்டது என்று கோபம்."

"போகட்டும், தினமும் சின்னம்மாவே சமைத்துக்கொண்டால் என்ன?"

"போடா பைத்தியக்காரா—உன் சின்னம்மாளைச் சமையல் செய்ய விடுவாரா உன் அப்பா? சமையல் செய்தால் உன் சின்னம்மா அலுத்துப்போய் விட மாட்டாளா?"

"பிறகு, நீ அலுத்துப்போக மாட்டாயா?"

"எனக்கென்ன கேடு அலுத்துப் போக?"

"ஆ...சொல்லம்மா நீ அலுத்துப்போக மாட்டாயா?"

"அலுத்துப்போனால் யார் அப்பனே எல்லாம் செய்வார்கள்?"

"எப்போதும் நீயே சமையல் செய்வது ஏன்? அலுத்துப் போவது ஏன்? சின்னம்மாளும் சமைக்கக் கூடாதா?"

"சின்னம்மாள் சமைத்தால் நாம் சாப்பிடலாமா? நாம் உயர்ந்த ஜாதி அல்லவா?"

"சின்னம்மா உயர்ந்த ஜாதி இல்லையா அம்மா?"

"இல்லை. இல்லை!!"

"ஊஹூ...சமைக்காவிட்டால் போகிறது—வீட்டில் வேறு வேலைகளையேனும் செய்யக்கூடாதா? எப்போதும் மெத்தைமேல் அப்பாவோடு பேசிக்கொண்டே இருக்கிறாளே!"

"ஐயையோ வந்தது ஆபத்து!—சின்னம்மாள் காதில் கேட்டால். சத்தமாய்ப் பேசாதேடா அப்பனே" என்றாள் மீனாக்ஷி மெதுவாக.

"கேட்டால் என்ன செய்வாள்?"

"என்ன செய்வாளா? மூந்தாநாள் பார்த்தா யல்லவா? அப்படியே உன் அப்பாவிடம் சொல்லி அடிக்கச் செய்வாள்."

"சின்னம்மாள் நல்லவள் அல்ல அம்மா......உன்னையும் அப்படியே அடிக்கச் செய்தாளல்லவா அன்றைக்கு?

"ஆமாம் என்ன செய்யலாம்?"

"அம்மா! உன்னையும் என்னையும் அப்பாவிடம் சொல்லி அடிக்கச் செய்யும் சின்னம்மா நம் வீட்டில் ஏன் இருக்கவேணும்? வெளியே துரத்தி விட்டால் என்ன?"

கண்ணன் சொன்ன மொழிகள் மீனாக்ஷியின் உள்ளத்தில் பெரிய மாறுதல் உண்டாக்கி, அவளுடைய முகத்தில் புதிய உற்சாகம் பொங்கும்படி செய்தன. உடனே கண்ணனை வாரி எடுத்து "என் தங்கக்கட்டி" என்று சொல்லிக்கொண்டே முத்தங் கொடுத்துவிட்டு, "சத்தம் போட்டுப் பேசாதேடா அப்பா! ஏதேனும் தொல்லை வரும்" என்றாள் மீனாக்ஷி.

கண்ணன் உடம்பை நெளித்துக் கொட்டாவி விட்டுக்கொண்டே "இன்னும் எவ்வளவு நேரம் இங்கே உட்காருவது அம்மா? எனக்குத் தூக்கம் தள்ளுது. சட்டென்று வா படுத்துக் கொள்ளலாம்" என்றான்.

"முடிந்து விட்டது கண்ணே, நட, போய்ப்படுத்துக் கொள்ளலாம்."

***

காலை 6½-மணிக்கு வந்த ரயில் வண்டியை விட்டிறங்கிய ஜனங்கள் வரிசை வரிசையாய் வந்து கொண்டிருக்கிறார்கள். "அதோ ரயில் ஸ்டேஷனி

லிருந்து வருகிற வண்டிகளின் சத்தம்" என்று சொல்லிக்கொண்டே கண்ணன் வேகமாய் வீதிப் பக்கம் ஓடி வந்தான்.

"அம்மா! சீனு மாமா வந்து விட்டார் பார் அம்மா" என்று கூச்சல் போட்டுக்கொண்டே மீனாக்ஷியிடம் ஓடினான் கண்ணன்.

"சீனு மாமா வந்து விட்டார்" என்ற வார்த்தை காதில் விழுந்தவுடனே மீனாக்ஷியின் முகாரவிந்தம் விகசித்தது. "வாஸ்தவமா? பொய் சொல்லாதேடா கண்ணு! மாமா எங்கே" என்று சொல்லிக்கொண்டே சட்டென்று அடுப்பின் மீதிருந்த இட்டலிப் பாத்திரத்தை இறக்கி வைத்துவிட்டு, பால் பாத்திரத்தை அடுப்பின்மேல் ஏற்றிவிட்டுத் தெருப்பக்கம் வந்து நின்றாள். ஸ்ரீநிவாச பிள்ளை காட்சி அளித்தார். மீனாக்ஷியின் கண்களினின்றும் நீர்த் துளிகள் சொட்டின. "ஏதோ உயிருடன் இருக்கிறேன் என்று இப்போதாவது ஞாபகம் வந்ததே—அதுவே போதும். நல்லவேலை செய்தீர்கள்" என்றாள் மீனாக்ஷி.

"என்ன செய்வது? புறப்படலாம் என்று எண்ணும் போதெல்லாம் ஏதோ ஒரு வேலை குறுக்கே வந்து விடுகிறது. சாவகாசமே கொஞ்சம் கூட இல்லை."

"அம்மாளுக்கு ஜுரம் என்று கேள்விப்பட்டேன். சௌக்கியமாகி விட்டதா?"

"ஆமாம் சௌக்கியமாகவே இருக்கிறாள்."

"கமலத்தை மாமியார் வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டு வந்திருக்கிறீர்களாமே."

"ஆமாம்! பதினைந்து நாளாயிற்று."

"போகட்டும் அவளையாவது அழைத்துகொண்டு போனீர்களே......"

"உன் மீது எங்கட்குக் கோபமா, அட பைத்தியமே?" என்று இன்னும் ஏதோ சொல்ல வா யெடுப்பதற்குள், தமது மடியில் உட்கார்ந்திருந்த கண்ணன் "என் புதுச்சட்டை எங்கே?—என் பூட்ஸ் எங்கே?—என்று ஒரே பிடிவாதமாய்ப் பேச்செடுக்க விடாமல் கேட்டான்.

"எல்லாம் பெட்டியில் இருக்கின்றன. எடுத்துக் கொடுக்கிறேன் பொறு" என்றார் ஸ்ரீநிவாச பிள்ளை.

"ஊஊ...இப்போதே எடுத்துக் கொடு."

"இதோ எடுத்துக் கொண்டிருக்கிறேனே."

ஸ்ரீனிவாச பிள்ளை பெட்டியிலிருந்து சொக்காய்களையும், பூட்ஸையும், வேறு சாமான்களையும் வெளியில் எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். அங்கே நின்று கொண்டிருந்த மீனாக்ஷி "ஐயோ பாலை அடுப்பின்மேல் வைத்து விட்டு வந்தேன். பொங்கி விட்டதோ என்னவோ தெரியவில்லை. போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று வீட்டுக்குள் ஓடினாள்.

"மாமாவுக்கும் எனக்கும் சீக்கிரத்தில் காபி கொண்டுவா அம்மா" என்று கூச்சல் போட்டான் கண்ணன்.

"ஆஹா...அப்படியே" என்று சொல்லிக்கொண்டே சென்றாள் மீனாக்ஷி.

***

"மாமா! அதோ அங்கே அழும் சத்தம் கேட்கிறதா? அப்பா அடிக்கிறார் அம்மாளை—காபி போட்டுக் கொடுக்க இவ்வளவு தாமதம் ஏன் என்று சத்தம் போட்டுக்கொண்டிருக்கிறார் பார்த்தாயா?"

"அடடா! என்னுடன் பேசிக்கொண்டிருந்ததினால் கொஞ்சம் தாமதம் ஆகி யிருந்தால் இருக்கலாம். இந்த அற்ப விஷயத்திற்கே அடிக்க வேணுமா?" என்று சொல்லிக்கொண்டே உள்ளே பிரவேசித்தார் ஸ்ரீநிவாச பிள்ளை.

மீனாக்ஷி கண்ணீர் ததும்பப் பேசாமல் நின்று கொண்டிருந்தாள். கண்ணன் மிகுந்த அச்சத்துடன் மீனாக்ஷியைப் பிடித்துக்கொண்டு நிற்கிறான்.

"ஏன்?—பேசுவதற்கு என்ன கேடு?—இவ்வளவு தாமதமா காபி கொடுக்க?" என்று கூச்சல் போட்டுக்கொண்டே மீனாக்ஷியின் கணவன் கடுமையாக அடிக்கும்போது, அஞ்சி நடுங்கிக்கொண்டே "இந்தத் தடவை அடி பார்க்கலாம் அம்மாளை—நானும் மாமாவும் உன்னை என்ன செய்..." என்று ஓவென்று அழுதான் கண்ணன்.

# சோதிடம் பொய்யா?

(நற்சாந்துபட்டி S. கோவிந்த ஐயங்கார்.)

எதிர்காலப் பலன்களைக் கூறுவதில் சோதிட சாஸ்திரமே முதன்மையாகக் கருதப்பட்டு வருகின்றது. ஒவ்வொரு சோதிட சாஸ்திர விற்பன்னரும், பற்பல சாஸ்திரங்களை நன்காராய்ந்துணர்ந்து, கால தேச வர்த்தமான பலன்களைக் கூறுகின்றனர். மேலும் ஒவ்வொரு சோதிடரும், இலக்கினஸ்புடம், கிரஹஸ்புடம், பாவஸ்புடம், இராசி, ஓரை, திரேக்காணம், திரும்ஸாம்ஸம், சப்தாம்சம், துவாதசாம்சம், தசாம்சம், நவாம்சம், சட்டியம்சம், ஆக தசவர்க்கங்களையும் சூரியாதி அஷ்டவர்க்கங்களையும் முறைப்படி போட்டு, ஒவ்வொரு கிரஹங்களின் பலாபலம் அறிந்து தசாபுக்தி சித்திரன்களைக் கொண்டுதான் பலன்களைக் கூறுகின்றனர்.

சோதிடர்கள் கூறும் பலன்கள் யாவும் சரியாக நடக்கிறதில்லை யென்று பல ஜனங்கள் கூறுவதை உலகத்தார்கள் அறிந்த விஷயமே. ஆனால் அவ்வாறு கூறுவது மிகத் தவறேயாகும். ஏனெனில் ஒவ்வொருவரும் வீட்டில் குழந்தை பிறந்தவுடன் மணி பார்ப்பதில்லை. குழந்தை பிறந்தவுடன் ஆண் குழந்தையா அல்லது பெண் குழந்தையா, கருப்பா அல்லது சிவப்பா, நன்ருகக் கத்துகின்றதா எனக் குழந்தைகளின் லக்ஷணங்களை பலவாறு பிரசங்கித்துவிட்ட பின்னரே கடிகாரத்தைக் காண ஓடுகின்றனர். அவ்வமயம் 10-மணி 58-நிமிடமாக இருக்கும். அம்மனிதர்கள் இரண்டு நிமிடத்தில் என்ன மாறுபடக்கூடுமென நினைத்தவர்களாய் மணி 11-எனவே குறித்து வைத்துக் கொண்டு சோதிடர்களிடத்தில் காண்பிக்கிருர்கள்.

அத்துடன் கடிகாரம் கொஞ்சம் வேகமாகவும் போய்க் கொண்டிருக்கலாம். குறித்துக் கொடுத்த நேரத்தைக் கொண்டு ஜோதிடர்கள் முறைப்படி கணிதம் செய்து, சாஸ்திரங்களைக் கொண்டு நடக்கும் பலன்களை கூறிவிடுகின்றனர். ஆனல் ஆண்காலம், பெண்காலம் அறிந்தல்லவோ ஜோதிடர்கள் ஜாதகம் எழுதிப் பலன் கூறவேண்டு மென்றும் கேட்கலாம்.

குழந்தை பிறந்தது, புருஷ காலத்தில், ஆண் குழந்தை பிறந்ததாகவே வைத்துக்கொள்வோம். இவர்கள் மணி பார்த்துக் குறித்த நேரத்திலும், புருஷகாலம் ஆரம்பிக்கக் கூடியதாக இருக்கும். இதற்கிடையில் அதாவது (குழந்தை பிறந்தது முதல், மணி குறித்த நேரம்வரை) ஒரு ஸ்திரீ காலம் சென்றுவிட்டது. என்னே விபரீதம்! பிறந்த லக்கினமும் பறந்துவிடுகின்றது. சோதிடர்கள்தான் என் செய்வார்கள்! மணி குறித்த நேரம் புருஷகாலமாகவே இருக்கிறது. பிறந்த குழந்தையும் ஆணுகவே இருக்கின்றது. ஆதலால், மணி குறித்த நேரம் சரியென நினைத்தவர்களாய்ப் பலன்களைக் கூறி அதற்கேற்ற பரிகாரங்களையும் செய்து வைக்கின்ருர்கள்.

ஜனங்கள், பலன்கள் ஒன்றும் நடக்கவில்லையென்று சோதிடர்களிடம் குறைகூறுவதால் யாதொன்றும் பிரயோசனப்படாது. மணி சரியாகக் குறித்தவர்களுக்குச் சோதிடர்கள் கூறும் பலன்களும் சரியாகவே நடந்து வருகின்றன. ஆகையால் ஒவ்வொரு குடும்பத்திலும் பிரசவ காலம் சமீபித்துவிட்டால் சரியான கடிகாரம் ஒன்று அவசியம் அருகிலிருக்கவேண்டும். குழந்தை பிறந்தவுடன் மணியைப் பார்த்துக் குறித்து, சோதிடர்களிடம் கொடுத்தால் அவர்கள் கூறும் பலன்களும் சரியாகவே நடக்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.





நான் சினிமா நடிகனானால்



சீமை சென்று திரும்பிய சாஸ்திரி மகன்

# விசித்திர விநோதம்



"சிறையும் சிரையும்"

தேசாபிமானி:—"அடே கந்தா! போனமாசம் ஒரு தடவை, இங்கே வந்து உன்னைத் தேடினேன். நீ சிறைக்குப் போயிருப்பதாகக் கேள்விப்பட்டு மிகுந்த சந்தோஷமடைந்தேன்."

அம்பட்டன்:—"ஓ! அப்படியா? நான் மற்றவர்களுக்குச் சிரைக்கப் போயிருந்ததைப்பற்றி நீங்கள் ஏன் சந்தோஷப்பட்டீர்கள் என்று எனக்கு அர்த்தமாக வில்லை."

***

"அநுதாபம்"

பக்கத்து வீட்டுக்காரர்:—"ஐயோ! என் மகன் ஒரு புட்டிமையையும் அப்படியே குடித்து விட்டான்!"

எழுதிக் கொண்டிருப்பவர்:—அவன் மையைக் குடித்தாலும் சரி, கொட்டி விட்டாலும் சரி—நான் மட்டும் இப்போது என் பவ்ண்டன் பேனாவை இரவல் கொடுக்க முடியாது."



***

ஸ்திரீ:—"குழந்தைகள் போட்டோவுக்கு என்ன கேட்கிறீர்கள்."

போட்டோகிராபர்:—"டஜனுக்கு ஒரு ரூபாய்"

ஸ்திரீ:—"எனக்கு ஏழு குழந்தைகள் மாத்திரமே இருக்கிறார்கள்.

வாத்தியார்:— "மரியாதையினால் பணம் நஷ்டம் ஆகிவிடாது. ஆகை யால் மரியாதையைக் கற்றுக்கொள்."

மாணவன்:— "இது உண்மை அல்ல சார். ஒரு தந்தி எழுதி, அதன்கீழ் "தங்கள் கீழ்ப்படிதலுள்ள விதேயன்" என்று எழுதினால் அதற்காகப் பணம் அதிகம் வாங்கி விடுகிறார்களே.

***



"உண்மை"

தாய்'—"அடே சோமு! நீ உன் பாட்டியைத் (மாமியார்) "திருட்டு முண்டை" என்று திட்டினாயாமே- உள்ளதைச் சொல்."

பையன்:-(பயத்துடன்) ஆமாம் அம்மா! திட்டி விட்டேன்!"

தாய்:—"நீ இந்தத் தடவை உண்மையையே சொன்னதினால் மன்னித் திருக்கிறேன்."

***

"குறைகள்"

புது மாப்பிள்ளை:—"இப்போது நாம் இருவரும் கணவனும் மனைவியுமாய் விட்டபடியால்—உன்னிட மிருக்கும் சில குறைகளை நான் எடுத்துக் காட்டு வதில் குற்றம் இல்லை என்று நினைக்கி றேன்."

மனைவி:—"குறைகளா? என்னிடத்தி லுள்ள குறைகள் எனக்குத் தெரியும். நீங்கள் வாயை மூடிக்கொண்டு கம் மென்றிருந்தால் போதும். யாதொரு குறையும் என்னிட மில்லா திருந்தால்— ஆஹா! நான் எப்பேர்ப்பட்ட மாப்பிள் ளைக்கு வாழ்க்கைப் பட்டிருப்பேன்!



***

குப்பன்:— " எங்கள் ஊர் மிகவும் சௌக்கியமானது. என் தகப்பனார் 100-ல் இறந்தார். என் பாட்டனார் 120-ல் காலமானார்.

சுப்பன்!— " அவ்வளவு ஆண்டுகள் வாழ்ந்தார்களா?"

குப்பன்:— "ஆண்டுகள் அல்ல வீட்டுநம்பர்கள்."

மகன்:—“ அப்பா! எனக்கு இந்தத் தொப்பி நன்றாயில்லை. பார்ப்பதற்கு அவலக்ஷணமாயிருக்கிறது.”

தந்தை;— “உன் தலையில் வைத்துக்கொள், பிறகு உன் கண்களுக்குத் தெரியாது”

***

“பாக்கி”

நீதிபதி:—“நீ வாதி-குப்புசாமிக்குக் கொடுக்கவேண்டிய ரூபாய் முந்நூறும் கொடுக்காததால் உனக்கு மூன்று மாத சிறைவாச தண்டனை விதித்திருக்கிறேன்.”

குற்றவாளி (வண்ணான்):—நான் ஜெயிலுக்குப் போக வேண்டி நேரிட்டிருப்பதால் எஜமான்கள் எனக்குச் சேர வேண்டிய மூன்று மாத சம்பள பாக்கியை என் மனைவியிடம் கொடுத்துவிடும்படியாய் வேண்டிக்கொள்கிறேன்.

***

“போர்ட்டர்”

கணவன்:—“சாமான்களைத் தூக்கிக் கொண்டு போக ஒரு போர்ட்டரைக் கூப்பிடுவோமா?

மனைவி:— “நீங்கள் தலையில் ஒன்றும் தோளில் ஒன்றும் இடுப்பில் ஒன்றுமாகச் சாமான்களைத் தூக்கிக்கொண்டு நடந்தால் நாம் போர்ட்டரை அமர்த்தவில்லை என்று யாரும் சந்தேகப்படமாட்டார்கள்.”



***

தாய்:—“ உன் முகம் சுத்தமாயிருக்கிறது. கைகளில் அழுக்கு நிறைந்திருக்கிறதே”

பையன்:— “நான் இப்போது தான் கைகளால் முகத்தைக் கழுவினேன்.”

## "குரு பக்தி"



சீடன்:—"அதோ அந்தத் துரை சானி கொண்டுபோகும் நாய்போன வாரம் ஒரு செம்மானிடமிருந்த போது நமது குருவைக் கடித்து விட்டது. இப்போது அது சொகு சாய் வளர்கிறது."

மற்றச் சீடன்:— அது குருவின் குதிக்காலைக் கடித்திருந்தால் இப்படி ஒருநாளும் இராது. அந்நாய் அவரது செருப்பைத் தீண்டியதால் நாய்க்கு வந்த நல்ல கதியைப் பார்த்தாயா?

***

## "கோமாளிச் சாம்பார்"



சாப்பிடுபவர்:—" இந்த ஓட்டலில் சாம்பாரைப் பார்க்கப் பார்க்க வேடிக் கையாயிருக்கிறது. இது என்ன சாம் பாரோ?"

ஓட்டல்காரர்:—"இதுதான் கோமா ளிச்சாம்பார் என்பது. அதனால்தான் உங்களுக்கு வேடிக்கையாய்த் தெரி கிறது."

***

வாத்தியார்:—"அடே! வாயில் என் னே? அதை என்னிடம் கொண்டுவந்து கொடு"

மாணவன்:— "பல்வலி சார்! உங்களுக்குக் கொடுக்க முடியாது சார்!"

***

ஹெட்மாஸ்டர்:— (வாத்தியாரை நோக்கி) உங்கள் வகுப்பில் யாரை யேனும் அடிக்க நேர்ந்தால் என்னிடம் அனுப்பிவிடுங்கள், நான் தகுந்தபடி தண்டிக்கிறேன்."

வாத்தியார்:— "ஆஹா! அப்படியே செய்கிறேன்"

மறு நாள் ஒரு பையன் ஹெட்மாஸ்டரின் அறைக்குப்பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். ஹெட்மாஸ்டர் அப்பையனை அறைக்குள் இழுத்துக் கொண்டுபோய் இஷ்டம்போல் வெளுத்துவிட்டுக் கேட்கிறார்.

"இனிமேலாவது புத்திசாலித்தனமாய் நடந்துகொள்ளுவாயா?"

பையன்:—" நான் இது வரை எந்தக்குற்றமும் செய்ததில்லை சார்! தங் களிடம் பூகோளப் படம் வாக்கிக்கொண்டு வரும்படி வாத்தியார் அனுப்பினர். அதற்காக வந்து நின்றேன். நீங்கள் அடித்துவிட்டீர்கள்."



## "தமிழ்ப்பாடம்"

தமிழ் முன்ஷி:—"நீங்கள் பங்களாவுக் குப்போய் விட்டார்கள்" என்பது சரியா தப்பா?

புதிதாய்த் தமிழ்ப் படிக்கும் துரை:— "தப்பு"

முன்ஷி:— "ஏன்?"

துரை:—"நாங்கள் பங்களாவிற்குப் போகவில்லை—இங்கேயே இருக்கிறோர்கள்" என்று சொல்ல வேண்டும்.

***

## "பார்வை"



மோட்டார் ஓட்ட லைசென்ஸ் வாங்க ஒருவன் போலீஸ் அதிகாரியிடம் சென்றான்.

போலீஸ் அதிகாரி:—"உனக்குப் பார்வை சரியாயில்லை என்று சந்தேகிக்கின்றேன். அதோ நிற்கும் மோட்டார்காரின் நம்பரைப் பார்த்துச் சொல் பார்க்கலாம்."

லைசென்ஸ் வாங்கவந்த ட்ரைவர்:— "மோட்டார் எங்கே நிற்கிறது?"

***

காலேஜ் ஆண்டு விழா நாளில் ஒருவர் பிரசங்கம் செய்யத் தொடங்கினர். இவர் இரண்டு மூன்று மணி நேரம் ஓரே மூச்சுடன் விடாப்பிடியாய்ப் பேசிக்கொண்டிருந்தார். எல்லாரும் அவரவர் வந்த வழியை நோக்கித் தப்பித் துக்கொள்ளத் தொடங்கிவிட்டனர். எல்லாரும் காலியாகியும் பிரசங்கியார் தமது பிரசங்கத்தை நிறுத்தவில்லை. கடைசியில் ஒருவர் மாத்திரம் இருந்தார்.

"என்ன தாங்கள் இன்னும் உட்கார்ந்துகொண்டிருக்கிறீர்களே!"

"தாங்கள் பேசி முடிந்தவுடன் நானும் பேசலாம் என்று உட்கார்ந்து கொண்டிருக்கிறேன்."

***

சுப்பன்— "விரலில் எதற்காகக் கயிறு கட்டிக்கொண்டிருக்கிறாய்?"

குப்பன்:—"என் சம்சாரம் என்னிடம் கடிதத்தைத் தபாலில் போடச் சொன்னாள். மறந்து போகாமல் இருப்பதற்குக் கயிறு கட்டிக்கொள்ளும்படி சொன்னாள்."

சுப்பன்:— "கடிதம் தபாலில் போட்டாயா?"

குப்பன்:— "கடிதத்தைக் கொடுக்க என் சம்சாரம் மறந்து விட்டாள்"

# கவிதைக் கோட்டம்.



## என் தாய்.

(ப. கலியாணசுந்தரம், பீ. ஏ.)

பத்துத் திங்கள் வயிற்றினில் வைத்துப் பரிந்து காத்தவர் யார்
தத்தி இந்தத் தரணியில் வந்ததும் தாவி யணைந்தவர் யார்
கத்திக் கதறி கண்ணீர்விட்டால் கட்டி யணைத்தவர் யார்
அத்தகு தாயின் அடிமலர் தம்மை அன்பாய்த் தொழுகேனே. (1)

சித்த மகிழ்ந்து முத்த மளித்துச் சிரித்து நின்றவர் யார்
பத்தரை மாற்றுத் தங்க மெனவெனை பரிந்து வளர்த்தவர் யார்
சித்த மதனில் சலிப்பது வின்றி சிசுருஷை செய்தவர் யார்
அத்தகு தாயிடுங் கட்டளை சென்னியால் ஆற்றி நானெழுகேனே. (2)

ஈயு மெறும்பும் என்னுடல் மொய்க்கா திருந்து பார்த்தவர் யார்
நோயும் நொடியும் வாராதெனக்கு நோன்பு நோற்றவர் யார்
சாயுஞ் சமயம் வந்து தன்மேல் சாற்றிகொண்டவர் யார்
ஆயு மன்னையின் அடிமலர் தம்மை அன்பாய்த் தொழுகேனே. (3)

நாயும் பூனையுங் காட்டி யெனக்கு நல்லமுதீந்தவர் யார்
பாயும் படுக்கையும் என்னுடன்கொண்டு பாலமு தீந்தவர் யார்
காயுங் கனியுங் களிப்புடனளித்து கண்டு மகிழ்ந்தவர் யார்
சேயும் நானும் அன்னவர் பாதம் சிந்தையாற் றொழுகேனே. (4)

நானே யடைந்த போதுளம் வருந்தி நடுக்கங் கொண்டவர் யார்
தேனே பாலோ வெனவெனைப் போற்றி தேற்றி நின்றவர் யார்
வானே ரேத்தும் வள்ளலை யெனக்கு வகுத்துச் சொன்னவர் யார்
மானென்புள்ள மாதாவை யென்றும் மறவாமற் றொழுகேனே. (5)

தான் மருந்துண்டு பத்தியங் கொண்டு தன்னலமிழந்தவர் யார்
நான் அழும்பொழுது நயமிகக் கொண்டு நல்லமுதீந்தவர் யார்
கோள் எனக்காக குருவுமதாக குணமுடனிருந்தவர் யார்
ஆன்றோரான அன்னையின் பாதம் அனுதினந் தொழுகேனே. (6)

ஆடை யணிகள் எனக்குப்பூட்டி அகங்களித்தவர் யார்
வாடைக்காற்று வாட்டாமலென்னை வருந்தி வளர்த்தவர் யார்

ஆடைத் தயிரும் அமுதமுமூட்டி அன்பாய் வளர்த்தவர் யார்
பீடை யொழிக்கு மன்னையின்பாதம் பேணித் தொழுகேனே. (7)

கூட இருந்து கொஞ்சிக் கொஞ்சி குதலைக் கேட்டவர் யார்
வாட என்னை விடாம லென்றும் வருந்திக் காத்தவர் யார்
ஆட என்னை விட்டுப்பார்த்து ஆனந்தங் கொண்டவர் யார்
பாட மோதிய வன்னையின்பாதம் பத்தியாய்த் தொழுகேனே. (8)

பாலும் பழமுந் தேனும் நெய்யும் பரிந்து தந்தவர் யார்
கோலும் பிரம்புங் கொண்டே என்றன் குற்றங் கடிந்தவர் யார்
சாலும் என்று பயந்த வென்னை சடுதியிலணைத்தவர் யார்
மேலும் அன்பு கொண்ட வன்னையை மெச்சித் தொழுகேனே. (9)

காலையும் கையையும் கண்ணில் ஒற்றி கட்டி மோந்தவர் யார்
சோலையுங் காவுந் தூக்கிச்சுற்றி சுகமாய் வளர்த்தவர் யார்
தோலைப் பற்றின இரத்தம்போன்ற தொடர்பு கொண்டவர் யார்
மாலையுங் காலையும் மாதாவின்பாதம் மறவாமற் றொழுகேனே. (10)



## சிறியன இகழேல்*

(சி. எஸ். சுவாமிநாத முதலியார்.)

அற்பமே நிறைவினை ஆக்கும், அந் நிறைவும்
அற்பமா காதெனச் சிற்பநூ லறிஞர்†
செப்பினர்; அதனாற் சிறியன இகழேல்.
இப்புவி யாங்கினில் ஏற்றமும் திறனும்
நல்குமா வேடம் புல்குதல்! விழையேல்.

செயுஞ்சிறு தொழிலே சீரிய தாமெனக்(கு)
உயும்வழி, அதுவல து ஒன்றிலை பிறிதெனும்
கருத்தோ டியற்றித் திருக்க முறுக.
எய்தும் தொழிற்கண் எய்திறன் அனைத்தையும்
பெய்திடு வோரே பெருமையிற் பிறங்குவர்.

* இது "சிறு காரியங்கள்" என்ற தலைப்புடன் "ஜஸ்டிஸ்" பத்திரிகையில் 13—6—32-ல் வெளிவந்த ஆங்கிலப் பாட்டைத் தழுவி எழுதப்பட்டது.

† மைக்கல் ஆஞ்சலோ.

இட்டிகை அடுக்கியே எழுப்புவர் மாளிகை;
தட்டுமேல் தட்டாய்ச் சமைப்பர் கோபுரம் :
இறை இறை செய்தே நிறைவுறும் பெருந்தொழில்.
ஐயெனச் சிகரம் அணைத்தல் ஒண்ணுமோ ?
பையப் பையப் படர்வழி ஏறத்

தாழாது உளுற்றித் தாள் வழுக்குற்று
வீழா வண்ணம் விழிப்போ டமர்ந்து
குறியது நோக்கும் நெறியின் நீங்கார்
உயர்நிலை எய்துதற் குரியவர்; ஏனையோர்
துயர்நிலை வெம்பவச் சுழிவழிப் பட்டுச்

சாலவும் வருந்தி ஓலமிட் டலைவர்.
மாடம் உயர்தலில் வாஞ்சை உடையோர்
பாடும் மெலிவும் படுதலா னல்லது
விரகால் அடையார்: சரதம் ஈதே.
பகுதியொவ் வொன்றையும் பாங்குற அமைக்கின்

தொகுதியும் அத்துணைத் துளக்கம் நண்ணிடும்
படிமிசை பிறந்த பலரும் மாண்பின்
முடிமிசை வயங்கும் மொய்ம்பினைப் பெற்றிலர்.
ஆயினும் நமக்கென வாய்ந்த வேலையை
நாளும் சிறிது நலமிகச் செய்யின்

நீளும் நம்தகை, நிலைஉயர்ந் துய்வம்.
ஒல்லுவ தாற்றின் வெல்லுவம் இறுதியில்.
வினையிற் சிறுமையும் மேன்மையும் தங்கா;
நினையிற் செய்திறன் நீர்மையால் அமைவன.
மிகச்சிறி யனஎன் றிகத்தில் உளவோ ?

அணுவினும் புகுந்திறை ஆட்டுதல் மெய்யெனில்,
பணிவுடன் சிறுதொழில் பண்பட ஆற்றலும்
இறைவனை வழிபடு முறைமையின் பாற்படும்.
புகழ்தலும் இலரே புலவோர் பெரியன;
இகழ்தல் சிறியன அதனினும் இலரே.

நம்செயல் அனைத்தின் நயம்தெரி காலை
எஞ்சா திவர்ந்திடும் மிகச்சிறு செயலும்,
பொற்பூண் போலப் பொறை மிகும்; ஆதலின்
அற்பமென் றொன்றிலை அவனியிற் பொருளே.





# இங்கிலாந்து நார்மனியர் வசமானது

:(o):

## (வெற்றிவீரன் வில்லியம்)

(T. S. ராஜகோபாலன், *B. A. L. T.*)

இங்கிலாந்தில் விட்டன் சபையாரும் அதன் பூரண ஆதரவு பெற்றிருந்த ஹெரால்டும், நார்மண்டி பிரபு வில்லியம் கொண்டாடிய இருவித உரிமைகளையும் புறக்கணித்துவிடவே, ஆயுத பலம் மிகுந்த வில்லியமுக்குப் பொங்கியது கோபம்! "சாத்தானும் சமயம் வாய்த்தபோது சாத்திரம் ஓதுவான்" என்று சொல்லும் ஒரு ஆங்கில பழமொழிக்கொப்ப, சத்தியம் புரண்ட ஹெரால்டைத் தான் தண்டிக்கப் போவதாயும், அந்தத் தர்ம யுத்தத்தில் தனக்கு உதவி செய்யும் வீரர்களுக்கு ஜெயம் கிடைத்ததும் தாராளமாக நிலம் வழங்குவதாயும் வாய் கிழிய வாக்களித்தான். அதன் பயனாகப் பல வீரர்கள் அவன் கொடியின் கீழ்க் கூடி இங்கிலாந்தின் மேல் படையெடுத்துவர வேண்டிய ஏற்பாடுகளை வில்லியம் ஆடம்பரங்களுடன் செய்தான். அவனை இங்கிலாந்தின் கரையில் இறங்கவிடக்கூடாதென ஹெரால்டும் தகுந்த ஏற்பாடுகளுடன் காத்திருந்தார்.

ஆனால் பாவம்! இங்கிலாந்தின் துரதிருஷ்டம்! அரச குடும்பத்திலேயே "உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டாம்! உடன்பிறந்தே கொல்லும் வியாதி" என்று தோன்றினான் ஒரு சகோதரத் துரோகி! அவனே ஹெரால்டின் சகோதரனான டாஸ்டிக் (Tostig) என்ற பாவி! ராஜப் பிரதிநிதியாய் ஆண்டபோது செய்த பல நீதிகளுக்காக, ஹெரால்ட் அவனைத் தண்டித்து, பதவியினின்றும் விலக்கி "செங்கோன் முறைமை"யைக் காட்டியிருந்தார். சற்று ஒரு மாதிரியாக மற்ற இரண்டு சகோதரர்களாக இருந்த எட்வின், மார்க்கார் என்றவர்களுக்கு அவனுடைய நாட்டைப் பங்கிட்டுவிட்டார்! அது பொருத அந்த அயோக்யன் நார்வே தேசத்திற்கு ஓடி அந்த தேச மன்னன் ஹெரால்ட் ஹெட்ராடா என்றவனை ஒரு சேனையுடன் அழைத்துக்கொண்டு, மற்ற சகோதரர்களின் வசமிருந்த நார்த்தம்பிரியா நாட்டுக்கு வந்திறங்கினான். அந்தப் பாவியைத் துரத்தி யடிக்க ஹெரால்ட் ஓடோடியும் வந்து ஸ்டாம்போர்டு ப்ரிட்ஜ் என்ற விடத்தில் வென்று துரத்தினார்.

ஜெயம் கிடைத்து களைப்புத் தீருவதற்குள் தெற்கே நார்மனிய வில்லியம் கரையில் இறங்கி லண்டன் தலைநகரத்தை நோக்கிப் புறப்பட்டான் என்ற சமாசாரம் கிடைத்து "இடியேறுண்ட நாக"மாய்த் தவித்து, தன் அரு

மைச் சகோதரர்களைச் சேனையுடன் வரும்படியாகச் சொல்லிவிட்டு வந்த வழியே திரும்பி ஓடினார். தன் வீரரில் பலர் ஸ்டாம்போர்ட் பிரிட்ஜ் யுத்தத்தில் மாண்டு போயினர் ஆனதால் வரும் வழியில் அவசர அவசரமாய் சேர்க்கக் கூடிய பழக்கமில்லாத பயிற்சி பெறாத முரடர்களை சேனை வீரர்களாக அழைத்துக்கொண்டு ஓடினார். அவர்களுடைய ஆயுதங்கள் சண்டைக் கோடாரி, இரண்டு ஓரங்களுள்ள முரட்டுப் பட்டாக்கத்திகள் முதலியன. சரீரங்களில் கவசங்களோ வேறு எவ்வித பாதுகாப்போ கிடையாது. இந்த அவசரக் கோலமாய் அலறிவருங் காலத்தில் இங்கிலந்துக் கரையில் இறங்கி கஷ்டமில்லாமலும் எதிர்ப்பில்லாமலும் லண்டனை நோக்கிப் புறப்பட்டுக் கொஞ்சதூரம் வந்துவிட்டான் வில்லியம். அவனுடைய ஆட்களை வழிமறித்து ஹேஸ்டிங்ஸ் என்ற கிராமத்தின் பக்கத்திலிருக்கும் ஸென்லக் குன்றின்மேல் தன் முரட்டுப் பட்டாளத்தை அவரவர்களுடைய அபூர்வ ஆயுதங்களுடன் நிறுத்தி என்னவந்தாலும் ஸ்தானத்தைமட்டும் விட்டு இறங்காமல் இருக்க உத்தரவிட்டிருந்தார் ஹேரால்ட். போர்க் கவசங்களும் அழகிய கத்திகளையு மணிந்திருந்த நார்மனிய வீரர்களில் பலர் ஆங்கிலோ சாக்ஸனியரின் கோடாரிகளுக் கிரையாயினர். பகல் முழுவதும் அகோர யுத்தம் நடைபெற்றது! வில்லியமுக்கு ஜெயம் வருமென்பது தெரியவில்லை. ஆனால் பலர் மாண்டனர்! பலத்தால் முடியாத காரியத்தை தந்திரத்தால் சாதிக்க எண்ணங் கொண்டான்.

அஸ்தமன சமயம். சண்டையில் தோற்றுப் புறமுதுகு காட்டி ஓடும்படியான பாவனையில் வில்லியம் தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டு நடத்தினன்! அதைக்கண்டனர் பயிற்சியும் அனுபவமும் அற்ற ஆங்கிலோ சாக்ஸனிய முரடர்கள்! ஹேரால்ட் எவ்வளவோ எச்சரித்தார். ஆயினு மென்ன? தங்கள் பலமான ஸ்தானத்தினின்றும் இறங்கி நார்மனியரைத் துரத்தி ஓடினர். கொஞ்ச தூரம் ஓடிய வில்லியம் தன் வீரர்களைத் திடீரெனத் திரும்பித் தாக்கும்படிக்கு உத்தர விட்டான்! பாவம்! துரத்தப்பட்ட ஆங்கிலோ சாக்ஸனியர் கூடிய வரையில் முரட்டு பலத்துடன் திரும்பி யோடித் தங்கள் மலை ஸ்தானத்தைத் திரும்பவும் அடைய முயன்றனர். வெகு வீரர்கள் திரும்பியும் ஏறிக் கொண்டனர். பொழுது நன்றாய் இருட்டியது. வில்லியம் தன் வில்லாளிகளைத் தங்கள் அம்புகளைப் பிரயோகிக்க உத்திரவு கொடுத்தான். பல அம்புகள் பறந்தன. தேசத்தின் துர்க்காலம் ஒரு அம்பு ஹேரால்டின் கண்ணில்பட்டு மரணாவஸ்தைக்குள்ளாகி யுத்தகளத்தினின்றும் கொண்டுபோகப்படுவதற்குள் உயிர் நீத்தார். தலைவனை யிழந்த பல தடி வீரர்கள் தங்கள் இரத்தத்தைத் தண்ணீராகப் பிழிந்து கொட்டி தங்கள் கொடியினைக் காக்கப் பாடுபட்டனர்! பொழுது விடிவதற்குள் ஆங்கிலோ சாக்ஸனியர் பலரும் வெட்டுண்டு வீழ்ந்து மடிந்தனர்! உதவிச் சேனைகளுடன் எட்வின், மார்க்கர் என்ற இரு சகோதரர்களும் வந்தார்களில்லை. வில்லியம் வெற்றி வீரன் ஆனான்!

லண்டனை நோக்கி விரைந்து வந்த காலையில் அங்குச் சிலர் எட்மண்ட் வழித்தோன்றலான எட்கார் அதீலிங் என்ற வாலிபன் தலைமையில் வில்லியமை எதிர்க்கத் துணிந்தவர்கள் சேனையைக் கண்டதும் மனமிழந்து அந்த வாலிபனையே வில்லியமுக்கு முடிசூட்டி விடும்படி செய்து அடங்கி விட்டனர்! ஆக, வில்லியம் ஜெயித்தான்! லண்டன் வாசிகளும் மனமொப்பி முடிசூட்டி விட்டனர். வெற்றிவீரன் வில்லியம் என்ற பெயரும் சரித்திரத்தில் ஏற்பட்டது. அவனுடைய தர்மயுத்தம் பலித்து விட்டது!

பிறகு தன் வாக்குறுதிப் பிரகாரம் தனக்கு உதவி செய்தவர்களுக்கு நில சன்மானங்கள் செய்யவேண்டு மல்லவா? "கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம்" என்பதைப்போல் பல ஆங்கிலோ சாக்ஸனியர் தனித்தனி முறையில் குட்டிக் குட்டியான யுத்தங்கள் செய்து தங்கள் ராஜ்யங்களை இழந்து பரிதவித்தனர்! அவர்களுடன்தான் எட்வினும் மார்க்கரும் சேர்ந்து அழிந்தனர். குட்டிக் கலகங்கள் அதிகமாக அதிகமாக வில்லியமுக்கு அதிர்ஷ்ட காலமும் பொங்கி அநேகமாக பல பாகங்களை சேர்த்துக் கொண்டான். அவனுக்கும் ஆங்கிலோ சாக்ஸனியரிடம் தீராப்பகையும் கடின சித்தமும் ஏற்பட்டு விட்டது. எதிர்த்துப் போராடியவர்களை இரக்கம் சற்றுமின்றி, பெரியோர், சிறியோர், ஆண், பெண் குழந்தை என்ற ஒரு பேதமுமின்றி கொன்று வீழ்த்தியோ அல்லது அடிமைப் படுத்தியோ அடக்கினான். பொதுவாக ஆங்கிலோ சாக்ஸனியர் அடிமைகளாயினர் என்பது அடுத்த பாராவில் விளங்கும்.

ஜெயித்த நிலங்களை முதலில் கொஞ்சம் தனக்கு ஒருபாகம் வைத்துக் கொண்டு மீதி பாகங்களை சேனைத் தலைவர்களுக்குக் கொடுத்தான். அவர்களுக்குப் பெரிய பிரபுக்கள் என்ற பொருளுள்ள (Tenants-in-chief) என்னும் பெயர் ஏற்பட்டது.

அந்தப்பெரிய பிரபு ஒவ்வொருவனும் தன் தன் மட்டில் கொஞ்சபாகம் நிலம் வைத்துக்கொண்டு மீதி பாகங்களை தங்களுக்குக் கீழுள்ள பிரபுக்கள் என்று பொருள்படும் (Tenants) பெயருள்ளவர்களுக்குக் கொடுத்தார்கள். இந்தப் பிரபுக்களில் ஒவ்வொருவரும் தம்தம் மட்டில் கொஞ்ச பாக நிலங்களை வைத்துக்கொண்டு தங்களுக்குக் கீழுள்ள சின்ன பிரபுக்கள் என்ற பொருள்படும் (Sub-Tenants) என்றவர்களுக்குக் கொடுத்தார்கள். இந்த சின்ன பிரபுக்கள் தங்களுக்குக் கீழ் நிலம் உழுபவர்களைவைத்து வேலைவாங்கி அரசனுக்குக் கப்பம் கட்டி வந்தார்கள். ஆங்கிலோ சாக்ஸனியர் பெரும்பாலும் நிலம் உழும் அடிமைகள் ஸ்தானத்திலேயே வைக்கப்பட்டனர். அவர்களை எந்த விதம் வேண்டுமானாலும் நடத்த நார்மனியருக்கு அதிகாரமுண்டு.

இம்மாதிரியாக நிலம் பெற்றவர்கள், நிலம் கொடுத்தவர்களுக்கு வருஷத்தில் 40 நாட்களுக்கு ராணுவ சேவை செய்யவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் ஒப்பந்தம். இவற்றைத்தவிர வில்லியம் மாதா கோவில்களுக்கு இம்மாதிரியான நிபந்தனை யாதொன்றுமின்றி "அரசனுக்குச் சதாகாலமும் வெற்றிகிடைக்க வேண்டுமென்று பிரார்த்தனை மட்டும் நடத்தவேண்டும்" என்பதற்காக பல மாதா கோவில்களுக்கு மான்யங்கள் விடப்பட்டன. இந்த மாதிரியான ராணுவ உதவி ஒப்பந்தத்தில் நிலம் பாகித்துக் கொடுப்பதற்கு "நிலமான்ய ஒழுங்குமுறை" *(Tendal system) எனப் பெயர்.

ஆகவே உதவியவர்களுக்கு சன்மானம் செய்தாகிவிட்டது. தேசத்தையும் வசப்படுத்தியாகிவிட்டது. ஆனால் ஒரு காரியம். பிரான்ஸில் அந்த

---

* (Tendal system) க்கு பல மொழி பெயர்ப்பு பதங்கள் இருந்தாலும் சுதேச சர்வகலாசாலையார் வெளியிட்டிருக்கும் "இங்கிலந்து சரித்திரம்" என்னும் புத்தகத்தில் காணப்படும் "நிலமானிய ஒழுங்கு முறை" என்ற பதமே அதிகப் பொருத்தமானதாக தோன்றி அந்தப்பதம் இந்தக்கதையில் கையாளப்பட்டிருக்கிறது.

அரசனுக்கு இம்முறையில் கீழடங்கிய ஒரு பிரபுவாக இருந்த வில்லியம் தன் ஆலயத்தினுல் அரசனையே மதியாத தான்தோன்றியாக இருந்து வந்தான். அம்மாதிரி தன் பிரபுக்கள் செய்துவிடாதபடி சில யுக்திகளைச் செய்து தன் ஸ்தானத்தை வலுப்படுத்திக்கொண்டான். நிலங்களை ஒரே இடத்தில் மொத்தமாய்ப் பிரிக்காமல், சிறிய சிறிய தாக்குகளாகத் தேசத்தின் பல இடங்களில் விஸ்தாரமாமாகக் கொடுத்துவிட்டான். அதனுல் சீக்கிரமாகவும் இரகசியமாகவும் படை திரட்ட பிரபுக்களால் முடியாது. இரண்டாவதாக, தன்னிடத்தில் நேரில் நிலம்பெற்ற பெரிய பிரபுக்கள் மட்டுமன்றி இதர பிரபுக்கள், சிறிய பிரபுக்கள், குடியானவர்கள் பலரையும் ஸாலிஸ்பரி என்றவிடத்தில் ஒன்று கூட்டி நிலம் ஆதியில் அரசனுக்குச் சொந்தமானதால் முதலில் அரசனுக்குப் பணிந்தே பிறகு தங்கள் யஜமானர்களுக்கு பணியவேண்டும் என்ற ஒரு பிரமாணம் வாங்கினுன். மூன்ருவதாக, நாட்டிலுள்ள பல நிலங்களையும், நிலச்சொந்தக்காரர்களையும் அவர்களுடைய பந்து மித்திரர் வேலைக்காரர்கள் கால்நடைகள் முதலிய பல அங்கங்களையும் விசாரித்தறிந்து ஒரு விபரம் (Domesday survey) தயாரித்துக்கொண்டு ஜனங்களின் நிலையைக் கண்காணித்து வந்தான். கடைசியாக, குடியானவர்களுக்குத் தங்கள் யஜமானர்களின் மேல் ஏற்படக்கூடிய பெருங்குறைகளைத் தன்னிடம் தெரிவித்துக்கொள்ளலாம் என்றும் கட்டளையிட்டிருந்து அவர்களுடைய விசுவாசத்திற்கு பாத்திரனுகி, பிரபுக்களை கொஞ்சம் இறுக்கிவைத்தான்.

இனி அடுத்த கதையில் வில்லியமுக்குப்பின் ஆண்ட இரண்டு இளவரசர்களில் இரண்டாவதான முதலாவது ஹென்ரியைப் பற்றி எழுதுவோம்.

## மூளைக்கு வேலையின் விடை



(1) பால். (2) கால். (3) கழுதை. (4) குட்டை. (5) கல்வி. (6) மாக்கள். (7) கோபால். (8) மரக்கால். (9) எருமை. (10) அவல். (11) அவல். (12) ஆனந்தபோதினி. (ஆனந்தம்=சந்தோடம். போதம்=ஞானம்.)

# மூளைக்கு வேலை



(வளவனூர்-தமராபுரி. N. வேணுகோபாலப் பிள்ளை.)

1. பருகும் பானத்தின் பெயர்—காலை வெட்டினல் தந்தம். ஈற்றெழுத்தை யொழித்தால் கவி—யாது?

2. அவயவங்களி னென்றின் பெயர்—காலை வெட்டினல் தெரிந்துகொள். ஈற்றெழுத்தை யொழித்தால் பூந்தோட்டம்—யாது?

3. மிருகத்தின் பெயர்—இடையை வெட்டினல் ஓர் ஆயுதம். தலையும் இடையும் ஒழிந்தால் ஓர் திங்களின் பெயர். தலையும் காலும் போனல் இதர பாடையிலில்லா வெழுத்து.

4. தன்னகத்தே நீரைக் கொள்ளும்—இடையொழிந்தால் தலைகாக்கும், தலையும் இடையும் போனல் நாகரிகர் அணியும் பட்டை. இடையும் கடையும் போனல் வேற்றுமை யுருபாகும்.

5. வித்தையின் பெயர்—புள்ளியை நீக்கப் போகம் ஆகும். விகுதியை நீக்க அசித்துப் பொருள். இடையை யொழிக்கப் பாட்டாகும்.

6. மிருகங்களின் பெயர்—இதில் காலை நீக்கக் குழந்தைகள்.

7. விஷ்ணுவின் பெயர்—பசம்பால் எனப் பொருள் படும்—யாது?

8. வண்டிக்கும், நொண்டிக்கும், மண்டிக்கும் கால் உண்டு. என்ன கால்?

9. எழு ஐந்து மை சேர்ந்தால் ஓர் மிருகத்தின் பெயராகும். யாது?

10. எட்டுங் காலும்—ல்—ம் சேர்ந்தால் தின்பண்டம் ஆகும். என்ன?

11. ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், ஸ்ரீ விநாயகனுக்கும் ஏற்ற வஸ்து யாது?

12. ஏக காலத்தில் நமக்கு சந்தோஷத்தையும்-ஞானத்தையும் கொடுப்பதெது?

## இரு பொருள் விளக்கம்.

1. சோமனைச் சோமன்போல் துவை. (வஸ்திரம்—சந்திரன்.)

2. நாணயத்தை வழங்க நாணயம் வேண்டும். (பணம்-வாக்குறுதி.)

3. ஆறுதலையரை வணங்க ஆறுதலை அடைவீர்கள். (சண்முகம்-தேறுதல்.)

4. புத்தியல்லாதவனுடன் புத்தியில்லாதவன் சேர்ந்தால் புத்தியுண்டாம். (புத்தியில்+ஆதவன்=புத்தியில் சூரியனைப் போன்றவன்—புத்தி+இல்லாதவன்=அவிவேகி.)

5. வாழைக் குலைப்பது வாழைக் கொலை. (ஜீவியத்தை யழிப்பது—கதலிக் கொலை.)

6. மடையர் தொழில் மடையரால் ஆகாது. (சமையல்வேலை-புத்தி இல்லாதவர்.)

7. காலில் முட்டைக்கும்-முட்டைக்குக் காலில். (காலில் முள் தைக்கும்—முட்டைக்குக் கால் இல்லை)

8. சேடனுக்குச் சேடனுட்டுந் தொழில் இல்லை. (நெசவுத் தொழிலாளன்—பாம்பு.)

9. ஒருகல மேற்கும் ஒரு கலமுண்டு. (12-மரக்கால்—பானை.)

10. மெய் யழியுமாதலால் மெய்யிய மொழி. (சரீரம்—உண்மை.)

11. அரவஞ் செயின் அரவம் ஓடும். (சப்தம்—பாம்பு.)

12. நீர் குடித்தது நீர். (நீங்கள்—ஜலம்.)

13. கானகந் தேயக் கானகஞ் சென்றார். (கால்+நகம்—காடு.)

14. மாலைகொண்டு மாலை வணங்கு. (ஆரம்—விஷ்ணு.)

15. கால் அடிக்கக் கால் ஒடிந்தது. (காற்று—கால் எனும் அவயவம்.)

16. வேலை தாண்டலும் வேலையே. (கடல்-தொழில்.)

17. உன் சாதியைச் சாதி. (குலம்—நிரூபி.)

18. பள்ளியில் பள்ளிகொள்ளாதே. (பாடசாலை—உறக்கம்.)

19. தாதாவை தாதா வென்றான். (பாட்டன்—கொடு கொடு.)

20. தையலுக்குத் தையல் வேலை தக்கது. (பெண்—தைத்தல்.)

21. கட்டிலில் கட்டிலின்மேல் கட. (கட்டு+இல்+இல்=கட்டப்பட்ட வீட்டில்—சயனத்திற்குரியது.)

22. கரி கரி நிறமானது. (யானை—கருப்பு.)

23. பொடி வாங்கப் போயின் பொடி சுடும். (மூக்குத்தூள்—மண்தூள்)

24. விலாசம் வரைய விலாசம் வேண்டும். (பெயர் முதலியன—விரிவான இடம்.)

25. வலியுடையவனுக்கும் வலியுண்டாகும். (பலம்—நோவுதல்.)

26. கத்தியால் வெட்டக் கத்திச் செத்தது. (ஆயுதம்—கதறி.)

27. கீல்மேல் கீல் பூசு. (கதவைத் திறக்கச்செய்யுங் கருவி—ஓர் தைலம்,)

28. கோ கோ கொணர்க என்றான். (அரசன்—பசு.)

29. வரையோடு வீழும் விரைவாயோடு. (கூறையோடு-ஓட்டமாயோடு)

30. அத்தி அத்தியை முறித்தது. (யானை—அத்திமரத்தை.)

31. சித்தி சித்தி பெற்றாள். (சிற்றன்னை—ஜெயம்)

32. பதியுடன் பதிக்குச் சென்றாள். (பர்த்தா—க்ஷேத்திரம்.)

33. மூவடிக் கோலால் நாலடி யடித்தான். (ஒரு கஜம்—நான்குமுறை அடித்தல்.)

34. ஐயமிடுவதில் ஐயமேன். (பிக்ஷை-சந்தேகம்.) (தொடரும்)

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## வல்லான் வகுத்ததே வாய்க்கால்

இந்திய மக்களைச் சுயராஜ்யத்திற்குப் பழக்கி வருவதாகப் பிரிட்டிஷ் அதிகாரிகள் அடிக்கடி சொல்லிக்கொண்டு வருவது வழக்கம். இந்தியாவில் சாதி சமய வேற்றுமை அதிகம் என்றும் அவ்வேற்றுமைகளைப் போக்கி இந்தியர் எல்லோரும் ஒரு ஜாதி என்ற உயரிய தேசீய மனோபாவத்தைத் தாங்கள் வளர்த்துக்கொண்டு வருவதாகவும் அவ்வதிகாரிகள் பெருமை பேசிக்கொள்ளப் பின் வாங்குவதில்லை. ஆனால் சொல்லைப்போல் செயல் இல்லை என்பது எல்லோருக்கும் அநுபவம். சென்ற மாதம் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் நமது நாட்டு வகுப்புப் பிரச்சினை சம்பந்தமாகத் தங்கள் தீர்ப்பை வெளியிட்டிருக்கின்றனர். அத்தீர்ப்பு முழுவதும் இந்திய தேசீயத்தை நாசமாக்கும் வகுப்புக் கனலை மூட்டும் பிரிவினை மயமாக விளங்குகின்றது. தேசீயவாதிகளும் நாட்டு நலம் வேண்டும் பிறரும் எதை அடியோடு வெறுத்தார்களோ அதையே பிரிட்டிஷ் அரசாங்கத்தார் துணிவுடன் பிடிவாதமாய்க் கொடுக்க முன் வந்திருக்கின்றனர். முஸ்லிம், சீக்கியர், இந்தியக் கிறிஸ்தவர், ஆங்கிலோ இந்தியர், ஐரோப்பியர், தாழ்த்தப்பட்டோர், பெண்கள், நிலச் சுவான்தார் முதலிய எல்லோருக்கும் தனித்தொகுதிகளின் மூலம் பிரதிநிதித்துவம் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இவர்கள் எல்லாரும் தனித்தொகுதிகளின் மூலம் சட்டசபைகளில் நுழைந்து என்ன செய்வார்கள்? தேசீயத்தை மறந்து தங்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்டும் பேரால் போராடுவார்கள். வகுப்புப் பிரச்சினை சம்பந்தமாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் செய்துள்ள முடிவானது வகுப்பு ஒற்றுமையையும் அமைதியையும் நிலைநாட்டுவதற்கு மாறாக இப்போதுள்ள பகைமையை மேன்மேலும் வளர்த்து வரும் என்பதே நமது கருத்து. இத்தீர்ப்பை எல்லாரும் ஒருமுகமாகக் கண்டிக்கின்றனர். ஆயினும் என்ன? வல்லான் வகுத்ததே வாய்க்கால் அல்லவா?

***

## ஒட்டவா உடன்படிக்கை

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற் குட்பட்ட நாடுகளுக்குள் வியாபார விஷயத்தில் பரஸ்பர சலுகை காட்டிக்கொள்ளும் வழியைக் காணும் நோக்கத்துடன் ஒட்டவா என்னும் நகரில் ஒரு மகாநாடு கூடியது. எல்லா பிரிட்டிஷ் ஏகாதிபத்திய நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் விஜயம் செய்திருந்தனர். இந்தியாவின் சார்பாகவும் பிரதிநிதிகள் போயிருந்தனர். ஆனால் இந்தியப் பிரதிநிதிகட்கும் ஏனைய பிரதிநிதிகட்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. இந்தியப் பிரதிநிதிகள் அரசாங்கத்தாரால் அனுப்பப்பட்டவர்கள். மற்ற நாட்டுப் பிரதிநிதிகள் மக்கட்கு ஜவாப்தாரியான பொறுப்பு வாய்ந்தவர்கள். ஒட்டவாவில் ஒவ்வொரு நாடும் உடன்படிக்கையைச் செய்து கொண்டிருக்கிறது. அம்முறையில் பிரிட்டிஷ் அரசாங்கப் பிரதிநிதிகளும் இந்திய (அரசாங்கப்) பிரதிநிதிகளும் ஒரு உடன்படிக்கையைச் செய்து கொண்டிருக்கின்றனர். இந்த உடன்படிக்கை விரைவில் இந்திய சட்டசபையின் அங்கீகாரத்திற்கு விடப்படும். இவ்வுடன்படிக்கை

யில் இரண்டு முக்கிய விஷயங்கள் அடங்கி யிருக்கின்றனவாம். முதலாவது இந்தியாவின் ஏற்றுமதி வியாபாரத்தை பெருக்கி வளர்ப்பது. இரண்டாவது, சில இந்தியக் கைத்தொழில்களுக்குள்ள பாதுகாப்புக்குப் பங்க மில்லாமல் பார்த்துக் கொள்வது. ஆனால் இது சம்பந்தமாய் அரசாங்கத்தார் வெளியிட்டிருக்கும் அறிக்கையை நோக்கும்போது இந்த இரண்டிற்குங்கூட ஆபத்து நேரும் உண்மை எளிதில் புலனாகும். ஏகாதிபத்தியச் சலுகையால் இந்தியாவின் ஏற்றுமதி வியாபாரம் பெருகும் என்று நாம் நம்பவில்லை. எங்கே நல்ல விலை கிடைக்குமோ அங்கே நம் நாட்டுப் பொருள்களை ஏற்றுமதி செய்யவிடாமல் ஒட்டவா உடன்படிக்கை குறுக்கே நிற்கும். பிரிட்டிஷ் பொருள்களுக்குச் சலுகை காட்டவேண்டி யிருப்பதால் இந்தியக் கைத் தொழில்கள் இதுகாறும் அநுபவித்து வந்த பாதுகாப்புக்களுக்குப் பங்கம் நேராமல் தீராது. நமது நாட்டில் இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யத் தக்க செயற்கைப் பொருள்கள் குறிப்பிடத்தக்கவை இல்லை. மூலப் பொருள்களையும் மலிவாகவே அனுப்ப நேரும். பிரிட்டிஷ் செயற்கைப் பொருள்கள் மலிவாகவும் ஏராளமாகவும் நமது நாட்டில் இறக்குமதியாகிக் குவிந்துவிடும். சலுகை முறையால் பிறநாட்டுப் பொருள்கள் அதிகமாக நமது நாட்டுக்கு வர வழியில்லை. ஆதலால் அந்நியப் பொருள்களுக்குள் சிறப்பாகப் பிரிட்டிஷ் பொருள்களையே இந்தியா வாங்கித் தீரவேண்டிய கட்டாயம் ஏற்படும். ஒட்டவா உடன்படிக்கையால் மிகுந்த லாபம் அடைவது இங்கிலாந்தே. இந்தியா அதற்குத் துணை செய்கிறது. இதுதான் ஒட்டவா உடன்படிக்கையின் சாரம். இவ்வுடன்படிக்கையை இந்திய மக்கள் ஏற்றுக்கொள்ளுவார்களா?

***

## மடாதிபதிகள் என்ன செய்கின்றனர்?

திரிச்சி ஜில்லாவிலுள்ள முசாபரி பங்களாக்களில் தங்குவோர் ஓய்வு நேரங்களில் படித்துப் பயனடையுமாறு பைபிள் புத்தகங்களை இலவசமாகக் கொடுக்கத் தயாராயிருப்பதாகவும், அவைகளை ஜில்லா போர்டார் ஏற்றுக் கொள்ளககூடுமா என்றும் பிரிட்டிஷ் அந்நிய பைபிள் சங்கக் காரியதரிசி ஷை ஜில்லாபோர்டாரைக் கேட்டிருந்தார். ஜில்லா போர்டாரும் அவைகளை ஏற்றுக்கொள்ளுவதாக ஒப்புக்கொண்டனர். பாருங்கள்! கிறிஸ்தவர்கள் செய்யும் சமயத் தொண்டில் ஆயிரத்தில் ஒரு பங்கேனும் நமது சைவ வைணவ மடாதிபதிகள் செய்ய முன் வருகின்றனரா என்று கேட்கின்றோம். நமது முன்னோர் சமயமும் மொழியும் பரப்புமாறு விடுத்த மானியப் பொருள்களை இன்றைய மடாதிபதிகள் என்ன செய்கின்றனர்? வம்புக்கும் வழக்குக்கும், கூத்திக்கும், கொலைக்கும் கொடுத்துக் கொடுத்துத் தொலைக்கின்றனர். சமயமும் மொழியும் அழிநிலை எய்திவரும் இக்காலத்தில் நமது மடாதிபதிகள் ஆடம்பரக் களியாடல் மோகங்களில் மூழ்கிக்கிடப்பது வருந்தத் தக்கது. தமிழ்ப் பொதுமக்களேனும் சமய நூல்களையும் மொழியையும் தக்கமுறையில் வளர்க்குமாறு அவர்களைத் தூண்டுவார்களா?

***

## போரொழிப்பு மகாநாடு

ஐரோப்பியப் பெரும் போருக்குப் பின்னர் உலகில் இனிமேல் போர்களே நிகழக்கூடாது என்ற உணர்ச்சி தீவிரமாகப் பரவிவருகிறது. சர்வ

தேச சங்கம் ஏற்பட்டதின் முக்கிய அடிப்படையான நோக்கமும் இதுவேயாகும். போர்க் கருவிகளை ஒழிக்கவேண்டும் என்ற விஷயத்தில் சர்வதேச சங்கம் பெரிதும் சிரத்தை காட்டிவரும் உண்மை எல்லாரும் அறிந்ததே. ஆனால் அந்தப் பிரச்சினை இன்னும் முற்றுப்பெறவில்லை. ஆலோசனையில் இருந்துவருகிறது. இப்பொழுது போர்களையே அடியுடன் ஒழித்துவிட வேண்டும் என்ற கிளர்ச்சி மேனாட்டில் தலைகாட்டியிருக்கிறது. சமீபத்தில் ஹாலெண்டிலுள்ள ஆம்ஸ்டர்டாம் என்னும் இடத்தில் போர்களை ஒழிக்கும் வழிகளைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் ஒரு மகாநாடு கூடியது. இம் மகாநாட்டிற்குப் பல நாடுகளிலிருந்தும் அறிஞர்கள் எழுந்தருளியிருந்தனர். அம்மகாநாட்டார் உலகில் போர்களை நிகழ்த்துவதால் பயன் விளையாது—தீமையே விளையும் என்று தெளிவுபடுத்தி அறிக்கை வெளியிட முடிவுசெய்திருக்கின்றனர். போரொழிப்பு மகாநாட்டில் கலந்துகொண்ட நம் நாட்டுத் தலைவர் வி. ஜே. படேல் அவர்கள் மாத்திரம் இக்கொள்கையை அப்படியே முழுதும் ஒப்புக்கொள்ளாமல் ஓரளவு ஒப்புக்கொண்டனர். ஏனெனில் இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைத்தாலொழிய உலகில் போர்கள் நிகழாமல் இருப்பதற்கில்லை என்பது அவருடைய நோக்கம். உலகில் ஆன்மார்த்த ஞானமும் அஹிம்ஸா தரும உணர்ச்சியும் பரவினாலொழியப் போர்கள் நிகழாதிருத்தல் அருமை. போரொழிப்புக்குரிய நடவடிக்கைகளைக் கவனிக்க ஒரு காரிய நிர்வாக சபையை ஏற்படுத்தி, இதைப் பாரிஸ் நகரில் ஸ்தாபிக்க அம்மகாநாட்டார் முடிவு செய்திருக்கிறார்கள். இக்கூட்டத்தாரின் பிரசாரம் எம்மாத்திரம் பயன்படும் என்பது இனிமேல்தான் தெரியவேண்டும்.

***

## சட்ட மெம்பரின் விபரீதப் போக்கு

சென்ற மாதம் நடைபெற்ற சென்னை சட்ட சபைக் கூட்டத்தில் சி. வகுப்புக் கைதிகட்கு மோர்கொடுப்பது பற்றி நீண்ட விவாதம் ஏற்பட்டது. இதற்குச் சமாதானம்கூற முன்வந்த சட்ட அங்கத்தினர் கனம் கிருஷ்ணன் நாயர் அவர்கள் சி. வகுப்புக் கைதிகட்கு மோர் தேவையில்லை என்றும், அவர்கள் மோர் உபயோகிக்கும் வழக்கம் இல்லை என்றும் விடை பகரத்துணிந்து விட்டார். இதை நோக்கியபோது எமக்கு அடங்காச் சிரிப்பு வந்தது. கனம் கிருஷ்ணன் நாயர் அவர்கள் தென்னாட்டில் பிறந்து வளர்ந்தவரா இல்லையா என்ற ஐயமும் எமக்குத் தோன்றி விட்டது. மற்ற நாடுகளின் நிலைமை எவ்வாறாயினும் தமிழர்கட்கும் ஆந்திரர்கட்கும் மோர் இன்றியமையாத உணவுப் பொருள் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். நமது நாட்டில் தோட்டி முதல் தொண்டைமான் வரை மோர்—தயிர்களை இன்றியமையாத உணவுப் பொருள்களாக அநுபவித்து வருகின்றனர். மோர் உடல் நலத்திற்கு ஆக்கம் செய்கின்றது என்னும் உண்மையை மேனாட்டு அறிஞரும் கண்டுபிடித்து ஒப்புக்கொண்டிருக்கின்றனர். உண்மை இவ்விதம் இருக்க, நமது நாட்டில் பிறந்து வளர்ந்த சட்டமெம்பரவர்கள் மோர் தேவை இல்லை என்று கூறியது எல்லாருக்கும் வியப்பை அளிக்கும் என்றே நம்புகின்றோம். சி—வகுப்புக் கைதிகட்கு மோர் கொடுக்காமல் இருப்பதும் ஒரு தண்டனையாகச் செய்து விடின் இதைப்பற்றிய பேச்சே தலைகாட்டாது என்று கனம் சட்ட அங்கத்தினருக்கு எடுத்துக் காட்டுகிறோம்.

# சிறுமணித் திரட்டு.

இங்கிலாந்தின் வருமானத்தில் ஆறில் ஒரு பங்கு—சுமார் ஐம்பது கோடி பவுன் (சுமார் 750கோடி ரூபாய்கள்) குடியிலும் குதிரைப் பந்தயம் முதலிய சூதாட்டங்களிலும் செலவாகிறது என்று மந்திரி லார்டு ஸ்னோடன் கூறினர்.

*  *  *

சமீபத்தில் இங்கிலாந்தில் கானிஸ்பரோ என்ற இடத்தில் நடைபெற்ற சுரங்கத் தொழிலாளர் திருவிழாவில் பலவேஷ நாடகம் ஒன்று நடந்தது. அப்போது மகாத்மா காந்திபோல ஒருவர் வேடம் தரித்திருந்தார். அச்சமயம் அங்கிருந்த லார்டு இர்வின் காந்திவேடக்காரருடன் சிறிது நேரம் பேசினராம். அங்கு வந்தவுடன் தாம் இந்தியாவில் பலமுறை சந்தித்துப் பேசியிருக்கிற புகழ்பெற்ற இந்தியரின் வேடத்தை முதன் முதல் கண்டதால் தாம் இந்தியாவில் மீண்டும் இருப்பதாகத் தோன்றியது என்று இர்வின் பிரபு சொன்னராம்.

*  *  *

ரோமாபுரியில் நடந்த அகில தேச ரொட்டிக் கண்காட்சியில் 2000 ஆண்டுக்கு முந்திய ரொட்டி ஒன்று வைக்கப்பட்டிருந்ததாம்.

*  *  *

கியூசௌ என்ற மாகாணத்தில் அபினியால் வரும் வரி வருமானம் 50,0 0 பவுனும்.

*  *  *

சீனவில் அபினி கொண்டுவருபவர்களிடமிருந்து மாகாண ராணுவ அதிகாரிகள் அக்கிரம வழியில் வசூலிக்கும் வரி ஆண்டு 1-க்கு 50,00,000 பவுனும்.

*  *  *

இங்கிலாந்து மக்கள் நாய்கட்காக மட்டும் ஆண்டுதோறும் அறுபது லக்ஷம் பவுன்களுக்குமேல் செலவழிக்கிறார்களாம். சுமார் பத்துக்கோடி ரூபாய்!

*  *  *

பசுக்களிடமிருந்து பால்கறக்கும் புதிய கருவி சுமார் 60 அடி சுற்றளவுள்ளதாம். இதைக்கொண்டு ஒரே முறையில் 5-பசுக்களை கறக்கலாமாம். 7-மணிநேரத்தில் 1680 பசுக்களைக் கறக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

*  *  *

காலம் சென்ற மேஜர் ஜாக் கோட்ஸ் என்ற கோடீசுவரர் தம்முடைய படுக்கை அறைகளை அமைக்க மட்டும் பதினைந்து லக்ஷம் பவுன் செலவழித்தாராம். ஸ்நான அறைகட்குப் பத்தாயிரம் பவுன் செலவாம்.

*  *  *

சென்னையில் கள்ளுக்கடைகளைக் குத்தகைக்குப் பெறும் ஏலத்தில் சென்ற ஆண்டைவிட இவ்வாண்டில் 50,000 ரூபாய் அதிகமாக ஏலங்கேட்கப்பட்டுள்ளதாம்.

*  *  *

கிராமபோன் பிளேட்டுகளைப் பித்தளைத்தகட்டிலே செய்யக்கூடிய புதிய முறையொன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அவைகளை ஆயிரம் ஆண்டுகள் வரை உபயோகிக்கலாமாம்.




**முகப்பவுடரின் பழமை:**—மேனுடுகளில் கி. மு. 400லேயே பெண்கள் முகப்பவுடர் உபயோகித்து வந்தனராம். ப்ரொபஸர் டி. லெங்விஹீர் என்பவர் காரனித் என்ற இடத்திலுள்ள ஒரு பெண்ணின் சமாதியை வெட்டிப் பார்த்ததில் அங்கு ஒரு ஒரு ஜாடியில் முகத்தில் பூசும் பவுடரும் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு எடுத்துப் பரீக்ஷை செய்து பார்த்தாராம். அச்சமாதி கி. மு. 400.ல் கட்டப்பட்டதாம்.

***

**அதிசயப் பிறவி:**—பெருவில் பான்லேயங் குவார்ட்டரில் ஒரு பர்மிய மாதுக்கு நான்கு கைகளுடன் கூடிய ஒரு குழந்தை பிறந்தது. இந்த அதிசய விபரீதப் பிறப்பு பெரு ஆஸ்பத்திரியில் நேர்ந்த சில மணி நேரங்களுக்குள், பெருவில் பெருத்த வெள்ளம் ஏற்பட்டது. மேலும் இக்குழந்தை பிறந்தவுடன் லேசான பூமி யதிர்ச்சி உண்டானதாகச் சொல்லப்படுகிறது. குழந்தை 15 நிமிஷங்கள் வரை பிழைத்திருந்து ஆஸ்பத்திரியிலேயே இறந்துவிட்டதாகத் தெரிகிறது. குழந்தையின் பிரேதத்தை ஆஸ்பத்திரியார் பத்திரப்படுத்தி வைத்துள்ளனராம்.

***

**உலகில் பெரிய நாய்:**—உலகிலேயே மிகவும் ஸ்தூலமான மனிதனும் மிகவும் சோம்பலுள்ள மனிதனும் அமெரிக்காவில்தான் இருக்கின்றனராம். சமீபத்தில் பிரிட்டனில் இப்ஸ்டாக் பாதிரியாகிய ரெவரெண்ட் கார்டு என்பவர் தாம் மிகப் பெரிய நாய் ஒன்று வைத்திருப்பதாக ஒரு பத்திரிகையில் வெளியிட்டிருந்தார். இதன் உயரம் 3 அடி. நிறை 154 பவுண்டு. நியூயார்க்கிலுள்ள மற்றொருவர் தம்மிடம் மிகப்பெரிய நாய்கள் இரண்டு இருக்கின்றனவென்றும், உயரத்திலும், நிறையிலும் பாதிரியினுடைய நாயைக்காட்டிலும் தம் நாய்கள் அதிகம் என்றும் வெளியிட்டிருக்கிறார்.

***

**அமெரிக்காவில் மீசை ஆசை:**—ஆண்கள் மீசை வைத்துக்கொள்ளுவது அமெரிக்காவில் முக்கியமானதாகப் பாவிக்கப்படுகிறதாம். ஆண்கள் எத்தகைய மீசை வைத்துக் கொள்ள வேண்டும் என்பதைப் பெண்களே பார்த்துக் கூற வேண்டுமாம். காலத்திற்கேற்றவாறு மீசைகளில் வெட்டு மாற்றப்படவேண்டுமாம். மிஸ்டர் ரோனல்டு கால்மன், வாலஸ்பீரி என்ற இருவர் மீசையின் தினுசுகளைக் கண்டுபிடிப்பதற்கும் யோசனை கூறுவதற்கும் பொறுப்பாளிகளாக விளங்குகின்றனராம். மீசை வைக்காத ஆண்களைப் பெண்கள் கோர்ட்டுகட்கு இழுக்கின்றனராம். பெண்கட்குத் தங்கள் ஆண்கள் மீசை வைக்காமலிருப்பதை நோக்க வெறுப்புத்தோன்றுகின்றது என்றும் அதனால் அவர்கள் மீது வழக்குத் தொடரப்படுகிறது என்றும் தெரிகிறது,




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(159-ம் பக்கத் தொடர்ச்சி.)

உடனே நான் கெஞ்சாத வண்ணமாய்க் கப்பற் றலைவனைப் பார்த்து "ஐயா! நீர் நியாயத்திற்குக் கட்டுப்பட வேண்டும்" என்றேன். இது கேட்டு அவன் "என்ன நியாயம்? நியாயமோ அநியாயமோ எனக்குத் தெரியாது. உத்தரவுப்படி நான் செய்தாகவேண்டும்" என்று பதில் சொன்னான். உடனே நான், "நீர் இவ்விதம் செய்வதில் சென்னையில் நடந்த ஒரு கொலையை மறைப்பதற்கு ஆதாரமாயிருக்கிறீர்கள். நிச்சயம் உமக்குக் கஷ்டம் நேரிடும்" என்று சொல்ல, அவன் புன்னகை புரிந்து கொண்டு "இந்த மாதிரியெல்லாம் நீர் கதை பேசுவீர் என்று எனக்கு முன்னமே தெரிவித்திருக்கிறார்களாதலால் உமது கட்டுக் கதையெல்லாம் என்னிடம் செல்லாது. வீண் பேச்சு வேண்டாம். நான் கொஞ்ச நேரம் பொறுத்து வருகிறேன். இப்பொழுது உம்முடன் பேசிக்கொண்டிருக்க எனக்கு நேரமில்லை" என்று அவசரமாகக் கூறிவிட்டு அறையைக் கடந்து கதவைச் சாத்திப் பூட்டிக் கொண்டு போய்விட்டான்.

அவன் அப்பால் சென்றதும் என் மனதில் ஒருவித குழப்பம் ஏற்பட்டுவிட்டது. நானிருக்கும் கப்பல் எங்கே போகிறதென்று தெரியாமல் என் மனம் தவித்து நிற்கின்றது. மேலும் சென்னை கோடீஸ்வர சேஷாசலஞ் செட்டிக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? என்னை இவ்விதம் தூர தேசத்திற் கனுப்பி விடுவதில் அவருக்கு என்ன லாபம்? இந்த எண்ணங்கள் ஒருபுறம் என்னை வதைக்க, கடந்த பயங்கரமான விஷயங்களும் எனக்கு அதிகமான வேதனையைக் கொடுக் ஆரம்பித்துவிட்டன. கொலை செய்யப்பட்ட என் மனைவியின் வதனம் என் மனதில் தோன்றிற்று. நான் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென அந்த முகம் என்னை நோக்கி இறைஞ்சுவதாக எனக்குத் தோன்றிற்று. நானே அவள் கணவன்; எனக்கே அவ்வுண்மை தெரியும்.

இருந்தாலும் நான் என்ன செய்யக்கூடும்? தற்சமயம் மீளமுடியாமல் என் விரோதியின் வலையில் சிக்கிக்கொண்டிருக்கிறேன். நடு சமுத்திரத்தில் சிறையிடப்பட்டிருக்கும் என்னால் யாதே செய்ய முடியும்? இருந்தாலும் கடவுளை நம்பினோர் கைவிடப்படாராகையால் நான் கடவுளையே நம்பியிருந்தேன்.

சூரியாஸ்தமனமாயிற்று. நான் சற்று தேக சௌக்கிய மடைந்தேன். விஷத்தின் வேதனை கொஞ்சங் கொஞ்சமாய் என்னைவிட்டு நீங்கியது. இருந்தாலும் நான் அடைபட்டிருப்பதை என்னால் தாங்க முடியவில்லை; எனக்கொரு மார்க்கமும் தோன்றவில்லை............இப்படியாக இரண்டு நாட்கள் கழிந்தன.

மூன்றாம் நாட் காலை சூரியன் புறப்படுவதற்கு முன்னதாகவே நான் விழித்திருந்தேன். அப்பொழுது கப்பல் எங்குதான் போகிறது என்ற ஆச்சரியம் மேலிட்டவனாய் என்னறையின் ஜன்னல் வழியாகப் பார்த்தேன். அப்பொழுது எனக்கு உண்டான சந்தோஷத்திற் களவேயில்லை. நிலம் தென்பட்டது! கப்பல் நிற்குமிடம் வந்துவிட்டது! இதுவே நான் தப்பித்துக் கொள்ள வேண்டிய சமயம்!

நான் கப்பற் றலைவனை எதிர் பார்ப்பதில் கொஞ்சமும் பிரயோஜனமில்லை. ஏனென்றால் அவன் இதற்கு முன்னால் என்னுடன் பேசியதைப் பார்த்தால் அவன் என்னை இன்னும் வெகு நாட்களுக்கு வெளியே விடமாட்டான் போலவே எனக்குத் தோன்றியது. ஆகவே திருட்டுத்தனமாகவே ஒருவருக்கும் தெரியாமல் தப்பி ஓட மார்க்கம் தேடலானேன்.

நானிருந்த அறை முழுதும் மரத்தாலேயே செய்யப்பட்டிருந்தது. கதவு நிலையுடன் கதவு திருகு ஆணிகளாலேயே மாட்டப்பட் டிருந்தபடியால் இந்தத் திருகாணிகளைக் கழற்றிவிடலாமென்கிற தைரியம் உண்டாயிற்று. முயற்சி திருவினையாக்கிற்று என்னுடைய முழு பலத்தையும் உபயோகித்து ஒவ்வொரு ஆணியாகத் திருகிக் கழற்றிவிட்டேன். பிறகு கதவு தன்னாலேயே வந்துவிட்டது. நான் செய்த வேலையினால் கொஞ்சங்கூட சப்தம் உண்டாகவில்லை யாதலால் எவரேனும் என்னைப்பற்றி சந்தேகங் கொள்ளவில்லை. கதவு திறந்ததும் நான் வெளிப்பக்கம் சென்று மறைந்து மறைந்து கப்பலின் ஓரத்தை யடைந்தேன். இதே சமயத்தில் பல படகுகள் கப்பலைச் சூழ்ந்து கொண்டன. படகுகளில் கூலிக்காரர்கள் ஏராளமா யிருந்தபடியாலும் நானும் ஒரு கூலிக்காரனைப்போல் அவர்கள் கூட்டத்தில் புகுந்துவிட்டேன். இந்த சமயத்தில் நான் தப்பி யோடிவிட்ட விஷயம் கப்பற் றலைவன் அறிந்து கொண்டு என்னைப் பிடிக்க ஆட்களை நாலா பக்கங்களிலும் ஏவினான். ஆனால் நான் மாறுவேஷம் போட்டுக் கொண்டு அவர்கள் கண்ணுக்கு அகப்படாமல் ஒரு படகில் சென்று கரையேறிவிட்டேன்.

ஐந்து நிமிஷங்களுக் கெல்லாம் கொளும்பு நகரத்துக் கடைத்தெருவில் நான் அதிவேகமாய் நடந்து கொண்டிருந்தேன். போலீஸ் ஸ்டேஷன் இருக்குமிடத்தை விசாரித்துக் கொண்டு சென்றேன். அரை மணி நேரத்திற் கெல்லாம் நான் போலீஸ் இன்ஸ்பெக்டரொருவருடன் பேசிக் கொண்டிருந்தேன்.

எனக்கு நேரிட்ட விஷயங்க ளனைத்தையும் நான் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு ஒப்பித்தேன். ஆரம்பத்தில் நான் சொல்லுவதை யவர் கொஞ்சங் கூட நம்பவேயில்லை. என் மனைவியின் கொலையைப்பற்றியும், எனக்கு இரு முறை நடந்த ஆபத்தைப்பற்றியும், நான் கப்பலேற்றப்பட்ட அதிசய சமாச்சாரத்தையும் அவருக்குச் சொன்னேன்.

நான் சொல்லவேண்டிய தெல்லாவற்றையும் சொல்லியான பிறகு இன்ஸ்பெக்டர் என்னைப் பார்த்து, "அமராவதியிலா நீங்கள் வந்தீர்கள்? அமராவதி

யின் தலைவனை எனக்கு நன்றாய்த் தெரியும்! அவன் தன்னுடைய அதிகாரிகள் சொன்னபடித் தவறாமல் நடந்து கொள்பவன். கப்பல் ஓட்டுவதில் கை தேர்ந்தவன். மேலும் பெருந்தன்மையுள்ளவனாயிற்றே? நான் முதலாக அவனை வரவழைத்து அவன் என்ன சொல்லுகிறானென்பதைக் கேட்டுக் கொள்ள வேண்டும். டாக்டரவர்களே! நீங்கள் சொல்லும் விஷயங்களெல்லாம் எனக்கு அதிசயத்தையே விளைவிக்கின்றன!" என்றார்.

நான் என் மனைவியிடமிருந்து அவசரத்து ஞாபகார்த்தமாக எடுத்துவந்த வைர மாலையையும், 'நான் சாரதாவைக் கண்டேன்' என்ற துண்டுக் கடிதத்தையும் இன்ஸ்பெக்டருக்குக் காண்பித்தேன்.

இவைகளைப் பார்த்துவிட்டு அவர், "ஆச்சரியம்! நிரம்பவும் அதிசயமாயிருக்கிறது! நான் இப்பொழுதே கப்பல் தலைவனுக்குச் சொல்லியனுப்புகிறேன்" என்று கூறிய வண்ணம் ஒரு போலீஸ் சேவகனைக் கப்பற் தலைவனைக் கையுடன் அழைத்துவரும்படி கட்டளையிட்டார்.

கப்பல் தலைவன் வருவதற்குள்ளாக இன்ஸ்பெக்டர் என்னைக் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் நான் விபரமான விடை யளித்ததோடு, என் மனைவி கொலை செய்யப்பட்ட அதிசயத்தையுங் கூறினேன். நான் கூறும் விஷயங்கள் நம்பத் தகாதவையாகவே யிருக்குமென் றெனக்குத் தெரியும். ஆனால் இன்ஸ்பெக்டரிடம் ஆரம்பத்திலிருந்த அவநம்பிக்கை இப்பொழுது இல்லை யென்றும் என் விஷயத்தில் அவர் அதிக ஊக்கம் செலுத்திக் கவனிக்கிறாரென்றும் அறிந்துகொண்டேன்.

நான் பேசி முடித்த பிற்பாடு இன்ஸ்பெக்டர் என்னைப் பார்த்து, "டாக்டர் அவர்களே! நீங்கள் கூறுவது நம்பத் தகாததாயிருந்தாலும் நீங்கள் பொய் சொல்லக் காரணமில்லை யாதலால் உங்கள் பேரில் எனக்குப் பூர்ணமான நம்பிக்கையுண்டு. இவ்விஷயத்தை விசாரிக்காமல் விட்டுவிடுவது பெருங் குற்றமாகும்" என்றார்.

அப்பால் இருவரும் சுமார் பத்து நிமிஷங்கள்வரை ஒன்றும் முக்கியமாகப் பேசவில்லை. பிறகு கப்பற் றலைவனும் வந்துவிட்டான்.

அவன் வந்ததும் இன்ஸ்பெக்டரைப் பார்த்து "தாங்கள் எனக்குச் சொல்லி அனுப்பினீர்களோ?" என, இன்ஸ்பெக்டர் "ஆம் நான்தான் அழைத்து வரும்படிக் சொன்னேன்......... நல்லது, இம்மனிதரை உனக்கு தெரியுமோ?" என்று என்னைச் சுட்டிக் காண்பித்துக் கேட்டார்.

இன்ஸ்பெக்டர்:—நல்லது, காரணமில்லாமல் நீ இவரை யுன்னுடைய கப்பலில் அடைத்துவைத்து வந்ததாக இவர் உன்மீது குற்றம் சொல்லுகிறார். மேலும் இவர் பிரக்ஞையுடனில்லாதபோது இவரை நீ உன்னுடைய கப்பலில் ஏற்றிக்கொள்வது உன்னுடைய தப்பிதமல்லவா?—என்று கப்பல் தலைவனைப் பார்த்து வினவினர்.

கப்பற்றலைவன்:— நான் சொல்லவேண்டியதை இம்மனிதருக்கு முன்னமேயே சொல்லிவிட்டேன். என்னுடைய அதிகாரிகளின் உத்தரவுப்படி நான் செய்யாமலிருப்பதும் தப்பிதந்தானே? இவரைப்பற்றிய விஷயத்தில் ஏதாவது குற்றமுண்டாயின் அது என்னுடைய அதிகாரிகளைச் சேருமேயல்லாது நான் எப்படி ஜவாப்தாரியாவேன்?—என்றான்.

இன்ஸ்பெக்டர்:— அல்ல; இதற்கு நீதான் ஜவாப்தாரியாக வேண்டும். பிரக்ஞையில்லாதவர்களைக் கப்பலில் ஏற்றிக்கொள்ளக்கூடாது என்ற நிபந்தனையை நீ நன்கறிவாய்.

கப்பல் தலைவன்:—ஆம் இருந்தாலும் எனக்கு வந்த கட்டளையை நான் எப்படி மீறி நடப்பது?

இன்ஸ்பெக்டர்:— நல்லது; இம்மனிதர் உன்னுடைய கப்பலுக்கு எப்படி வந்து சேர்ந்தார்?

கப்பற்றலைவன்:—உண்மையில் இவர் என் கப்பலுக்கு வந்ததே எனக்குத் தெரியாது. கப்பல் சென்னையை விட்டு இரவு 3.மணிச்குப் புறப்படவேண்டியது. மூன்று அடிக்கப் பத்து நிமிஷங்கள் வரையில் நான் சென்னையில் என்னுடைய வீட்டிலிருந்தேன். அப்பால் கப்பல் புறப்படும் சமயத்தில் எனக்குக் கப்பல் எஜமானரிடமிருந்து இந்த கடித மூலமாக உத்தரவு வந்தது இதோ இருக்கிறது, கடிதம் பாருங்கள்— என்று சொல்லி ஒரு கடிதத்தை இன்ஸ்பெக்டரிடம் கொடுத்தான்.

இன்ஸ்பெக்டர் கவனமாக அதைப் படித்துப் பார்த்துவிட்டு மிக்க ஆச்சரியத்துடன் அதை என்னிடங் கொடுத்தார். நானும் அதைப்படித்துப் பார்த்தேன். அது மர்மத்தையதிகப்படுத்தியது; ஏனெனில் அது உண்மையாகவே சென்னை சேஷாசலஞ் செட்டியவர்களின் கடிதமாக விருந்தது:—. அக்கடிதத்தில் பின்வருமாறிருந்தது:—

டாக்டர் லோகநாதன் என்பவர் அடிக்கடி ஒருவித தேக வலியினால் பிரக்ஞையற்றிருப்பது வழக்கம். ஆனபடியினால் இவர் உன்னிடம் வந்து சேரும்போது பிரக்ஞையில்லாமலிருந்தால் அதற்காக நீ ஆயாசப்பட வேண்டியதில்லை. மேலும் அவர் சரியான ஸ்வாதீனத்துடனில்லையாதலால் அவர் சொல்லுவதை எக்காரணங்கொண்டும் நம்பவேண்டாம். அநேகமாக சென்னையில் ஒரு கொலை நடந்திருப்பதாகவும் அதைத் தான் நேரிலே பார்த்ததாகவும் இதைப்பற்றி உடனே விசாரிக்க வேண்டியதவசியமென்றும் ஆனபடியினால் உடனே தான் சென்னைக்குத் திரும்பவேண்டியது நிர்ப்பந்தமென்றும் அவர் உன்னிடம் சொல்லுவார். இவ்விதமாக அவர் பலதடவைகளில் இதற்கு முன்னால் பேசியிருக்கிறார். இந்தப் பேச்சுக்கெல்லாம் நீ கொஞ்சங்கூட அஞ்சவேண்டாம். அவரைக் கப்பலறைக்குள்ளேயே பல நாட்களுக்கு வெளியே விடாமல் அடைத்து வைக்கவேண்டும். இந்த மனிதரைப்பற்றிய வருடைய ஆப்த நண்பர்களில் சிலர் மிகுதும் கவலை கொண்டிருக்கிறார்கள். மேலும் இப்பொழுது நான் சொல்லியிருக்கிறபடி நீ கொஞ்சங்கூட தவறாமல் செய்யும் பட்சத்தில் உனக்கு நல்ல சன்மானம் கொடுப்பதாகவும் அவர்கள் வாக்களித்திருக்கிறார்கள்.

சேஷாசலஞ்செட்டி.

நான் கடிதத்தைப் படித்த பிறகு இன்ஸ்பெக்டர் என்னை நோக்கி "உங்களை சேஷாசலஞ் செட்டியவர்கள் சென்னையைவிட்டு அனுப்பிவிடுவதற்கு ஒரு முக்கிய காரணமிருத்தல் வேண்டும்" என்று சொல்லிவிட்டுக் கப்பற்றலைவனைப் பார்த்து "இவர் என்னவிதமாகக் கப்பலுக்குக் கொண்டுவரப்பட்டாரென்று உனக்குத் தெரியாதா?" என்று கேட்டார்.

# " ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஆங்கீரஸஹு புரட்டாசிமீ—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855,
பசலி 1342, கொல்லமாண்டு 1108, ஹிஜரி 1351,
இங்கிலீஷ் 1932ஹு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெ | துதி59-33 | உத்17-43 | சி17-43அ | அசூன்ய சயன விரதம் |
| 2 | 17 | சனி | திரி60 | ரே24-0 | மா60 | |
| 3 | 18 | ஞா | திரி4-58 | அஸ்30-53 | சித்60 | |
| 4 | 19 | திங் | சது10-58 | பர38-18 | சி38-18மர | |
| 5 | 20 | செ | பஞ்17-5 | கி✲45-43 | சி45-43அ | |
| 6 | 21 | புதன் | சஷ்23-3 | ரோ52-50 | சித்60 | |
| 7 | 22 | வியா | சப்28-18 | மிரு59-3 | மா60 | |
| 8 | 23 | வெ | அஷ்32-18 | திரு60 | சித்60 | |
| 9 | 24 | சனி | நவ34-45 | திரு3-45 | சித்60 | |
| 10 | 25 | ஞா | தச35-25 | புன6-50 | சித்60 | |
| 11 | 26 | திங் | ஏகா34-5 | பூச8-5 | சித்60 | |
| 12 | 27 | செவ் | து 0-53 | ஆயி7-25 | சித்60 | |
| 13 | 28 | புத | திர26-3 | மகம்5-3 | சித்5-3அ | மாச சிவராத்திரி |
| 14 | 29 | வியா | ச ● 19-45 | பூரம்1-5 உத்55-50 | சித்1-5மர | சர்வ, பிதுரு, மாளய அமா வாசை, 9-க்குள் மழை |
| 15 | 30 | வெ | அ12-18 | அஸ்49-45 | அ49-45சி | ஆலய நவராத்திரி |
| 16 | 1 | சனி | பிர4-10 துதி55-35 | சித்43-13 | ம43-13அ | ஆஸ்வீயசுத்தம், சந்திர தரிசனம், நவராத்திரி ஆரம்பம் |
| 17 | 2 | ஞா | திரி47-10 | சுவா36-41 | சி36-11மர | விதை விதைக்க [மாகம் |
| 18 | 3 | திங் | சது39-10 | விசா30-35 | மா30-35சி | மாச சதுர்த்தி விரதம், அவ |
| 19 | 4 | செவ் | பஞ்31-55 | அனு25-8 | சி25-8மர | லலிதா பஞ்சமி |
| 20 | 5 | புதன் | சஷ்25-48 | கே20-45 | சி20-45மர | சஷ்டி, வியாதியஸ்தர் குளி |
| 21 | 6 | வியா | சப்20-58 | மூல17-33 | சித்60 | சாஸ்வதி ஆவாஹனம் [க்க |
| 22 | 7 | வெள் | அஷ்17-35 | பூரா15-53 | பி15-33சி | மஹாஷ்டமி, சரஸ்வதி பூஜை, ஆயுதபூஜை [ளில்) |
| 23 | 8 | சனி | நவ15-43 | உத்15-43 | சித்60 | சாஸ்வதிபூஜை (சில விடங்க |
| 24 | 9 | ஞா | தச15-23 | திரு17-3 | அ17-3மர | விஜயதசமி (விசேஷம்) |
| 25 | 1932ஹு அக்டோபர்மீ 10 | திங் | ஏகா16-30 | அவி19-43 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 26 | 11 | செவ் | து19-20 | சத23-43 | மா60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 27 | 12 | புத | திர22-20 | பூர28-35 | அ28-35சி | 10-க்குள் மழை |
| 28 | 13 | வியா | சது27-10 | உத்34-18 | சித்60 | கௌமதிஜாகர விரதம் |
| 29 | 14 | வெள் | ○31-53 | ரே40-55 | அமி60 | பௌர்ணமி, கரிநாள் |
| 30 | 15 | சனி | பிர37-38 | அஸ்47-53 | சித்60 | ஆஸ்வீயபகுள, வாகனமேற |
| 31 | 16 | ஞா | துதி43-43 | பர55-15 | சித்60 | துலாரவி நா-21-0 |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | 7-கன்-புதன் | | செவ் சுக் |
| சனி | 15-சிம்ம-சுக் 24-துலா-புத | | புத குரு கே |
| | | | சூரி |

Printed & Published by N. Munisawmi Mudaliar,
at the "Ananda Bodhini" Press,
No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.